# ஐசுவரிய சக்கரம்

மகாத்மா காந்தியால்

''பால பாரத''த்தில் எழுதப்பட்டதன்

மொழிபெயர்ப்பு.

சென்னை

கணேஷ் கம்பெனி

1922

விலை அணா 8.

# பதிப்பாசிரியர் உரை.

—:0:—

"அரிய நாகரிகங்களுக்கும் ஆதாரங்களுக்கும் காரண பூதமாயிருக்கும் அடிப்படை எதுவோ அதுவே நான் கொண்ட கருத்து; அக்கருத்தை நிறைவேற்ற ஆதிஸ்தானமாயிருக்கும் அடிவேரினைப் பற்றுவதே அழகு; அவ்வேருக்கு அந்தி சந்தி வேளைகளில் அருநீர் பாய்ச்சுமிடத்து காலக் கிரமத்தில் அவ்வேரானது துளிர்த்துச் செழித்துப் பெருகிப் பெருமரமாகித் தலையாகிற உச்சஸ்தானத்திலிருந்து உவப்பதற்கேற்ற நன்னீரைத் தருவதியல்பு" என்னும் உண்மையைக் கைப்பிடித்த உத்தமரான மஹாத்மா காந்தியடிகளின் 'ஐசுவர்ய சக்கர'த்தை அமிழ்தினும் இனிய அருந்தமிழ் உலகத்தார்க்கு இன்றேனும் அர்ப்பணஞ் செய்ய அரிய சமயங் கிட்டியதைக் கண்டு அகமகிழ்கின்றோம். ஐசுவர்யத்திற்கு ஆதாரபூதமான சக்கரத்தை ஜன்ம தேசத்தவர் கைக்கொண்டு வந்து ஆசரிக்கும் பக்ஷத்தில், உலகத்திற்கு உத்தாரணம் ஏற்படுமென்று அடித்தடித்துச் சொல்லும் வன்மை வாய்ந்த மஹான் காந்தியடிகளின் கருணைப் பிரபாவமானது ஆங்கில பாஷையிற் சொரிய, அதனைத் தமிழில் 'தர்ஜமா' செய்து தமிழர்க்குத் தரவேண்டுமென்று யாம் முனைந்தெழுந்தோம். அந்தப் பெருங்காரியத்தைக் கையேந்திய நம் நண்பர் காலரீதியின் பயனாகச் சிறைபுக நேர்ந்தது. அது காரணமாக அவர் 'தர்ஜமா' செய்த பிரதியினை மற்றோர் முறை ஒத்திட்டுப் பார்க்கச் சந்தர்ப்பானுகூலங்கள் கிடையாமற்போயின. 'செய்வன

திருந்தச் செய்யவேண்டுவதன் ஆவசியகத்தைக் கைக்கொண்டதனாலேயும், அதன் மீதிருந்த பேராவலையே கிரகபலன் என்று நாம் மதித்ததனாலேயும், இனியுந் தாமதஞ் செய்யலாகாதெனக் கருதி உள்ளபடி அச்சிட்டு ஊரார் நலம்பெற்றுய்யும் பெருநோக்கங்கொண்டு இதனை. முன்னிடலானோம். இங்ஙனம் முன் கொணர்ந்ததில் உண்டான சிரம ஸாத்தியங்கள் பல ; என்றாலும் குற்றத்தைத் தள்ளிக் குணத்தையே கிரகிப்பது காரியவாதிகளின் இயல்பாதலால், இந்த 'ஐசுவர்ய சக்கர'த்திலுள்ள அம்சங்களைக் கையாளும் அனைவரும், இந்நூலிற் பிலழயேதேனு மிருக்கக் காண்பாராயின், அதனைப் பாராட்டாது காலரீதியினால் நேர்ந்த கிரியை யெனமதித்து, கனத்துடன் போற்றிப் பலன் பெறுவாராக.

சென்னை, 26—9—1922. } கணேஷ் கம்பெனி.

# பொருளடக்கம்.




| | | | |
|---|---|---|---|
| மேனாட்டுச் சாமான்களை நீக்கல் | | .... | 1 |
| கிலாபத்—சுதேசியம் | .... | .... | 4 |
| சுயராஜ்ய ரகசியம் | .... | .... | 7 |
| புதிய சகாப்தம் (ஸ்ரீ துவஜேந்திர நாத் டாகூர் எழுதியது) | | | 14 |
| சுதேசியம் | .... | .... | 17 |
| பஞ்சாபில் சுதேசியம் | .... | .... | 27 |
| சுதேச பண்டசாலை | .... | .... | 30 |
| செல்வ விஷயம் | .... | .... | 32 |
| விலக்கஞ் செய்வதெப்படி | .... | .... | 41 |
| கைராட்டினத்தின் கானம் | .... | .... | 43 |
| கைத்தறியும் யந்திரசாலையும் | .... | .... | 48 |
| கை நூலும் கைநெசவும் | .... | .... | 53 |
| நூலிழைப்பது | .... | .... | 58 |
| கை நூல் தேவை | .... | .... | 62 |
| நூலிழைத்தல் கடமை | .... | .... | 65 |
| நூற்கும் கடமை | .... | .... | 68 |
| கைராட்டினத்தின் போதம் | .... | .... | 69 |
| கைராட்டினத்தின் தொனி | .... | .... | 71 |
| சீனாவில் கைராட்டினம் | .... | .... | 76 |

| | | | |
|---|---|---|---|
| பஞ்சத்திற்குப் பரிகாரம் நூலிழைத்தல் | .... | .... | 77 |
| கைராட்டினத்தின்விசேஷம் | .... | .... | 85 |
| செல்வச்சக்கரம் | .... | .... | 88 |
| கைராட்டினம் | .... | .... | 92 |
| மாதிரி நெசவுபாடசாலை | .... | ... | 95 |
| மெல்லிய கதிரின் பலன் | ... | ... | 105 |
| கைத்தறிகள் | ... | ... | 107 |
| கை நூலைப் பாவுபோடுதல் | ... | ... | 112 |



உ

# ஐசுவரிய சக்கரம்

## 1. மேனாட்டுச் சாமான்களை நீக்கல்

ஒத்துழையாமைத் திட்டத்தின் முதல்படியான அம்சங்களைக் குறித்து அன்று சென்னைக் கடற்கரை மகாநாட்டிலே விளங்கச் சொன்னேன். நான் கூறிய வாதங்களுக்கு ஸ்ரீமான் கஸ்தூரி ரங்க ஐயங்கார் விடை தந்திருக்கிறார். ராஜாங்கப் பட்ட மறுத்தலைத் தவிர்த்து, மற்ற எந்த அம்சத்தையும் அவர் ஏற்றுக் கொள்ள வில்லை. இதர அம்சங்களை விடுத்து, அவைகளுக்குப் பதிலாக மேனாட்டுச் சரக்குவிலக்கை மேற்கொள்ளலா மென்பது அவருடைய யோசனை. மிக்க திறமை வாய்ந்த பிரசித்த புருஷராகிய ஸ்ரீமான் ஐயங்கார் மேனாட்டுச் சரக்கு விலக்கை வற்புறுத்துவதால், நான் அவ்வி ஷயத்தைப் பற்றிச் சிறிது சொல்லித்தீரவேண்டும்.

முதலாவதாக, பிரிட்டிஷ் சாமான்களை விலக்கல் ஒரு தண்டனை போலாகும். ஒத்துழையாத் திட்டத் திலே அதற்கு இடங்கிடையாது. ஏனெனில், தன்னலப் பரித்தியாகம் ஒத்துழையாமைக்கு அடிப்படையாகும். தவிர அத்தியாகம் பரம கடமையுமாகும்.

இரண்டாவதாக, ஏதேனும் தண்டனையான காரியஞ் செய்வதாயின், அக்காரியம் சடுதியில் ஆவதாகவும், கருதிய பலனைத் தட்டாமல் தருவதாகவும், இருக்க வேண்டும். தனிப்பட்ட மனிதர்மட்டும் மேற்கொள்ளின், மேனாட்டுச்சரக்கு விலக்கு பலனற்ற தாகிவிடும்; பலனில்லாமற் போயின், திருப்தி தராது; ஆனால், ஒத்துழையாமைத் திட்டத்தின்படி, ஒவ்வொரு காரியமும் திருப்தியைத் தரும்.

மூன்றாவதாக, மேனாட்டுச் சரக்கை விலக்குவதென்பது அனுபவத்தில் அடியோடு நடவாதகாரியம். ஏனென்றால், லட்சப்பிரபுக்கள் உடனே தங்களது லட்சோப லட்சக் கணக்கான திரவியத்தைத் தியாகஞ் செய்ய வேண்டிவரும். ஒரு வக்கீல் தனது வேலையை நிறுத்தி விடுவதென்ன, அல்லது ஒரு பட்டதாரி தன் பட்டத்தை விட்டுவிடுவதென்ன, அவசியமானல் ஒரு தந்தை தன் மக்களின் கல்வியைத் தியாகஞ் செய்வதென்ன,—ஆகிய இவைகளை விட, ஒரு வியாபாரி தன் லட்சக்கணக்கான தனத்தைத் தியாகஞ் செய்தல் மிக்க கஷ்டமாகும். மேலும், வியாபாரிகள் இப்போது தான் ராஜீய விஷயங்களில் சிரத்தை காட்டத் தலைப்பட்டிருக்கிறார்கள். ஆதலின் அவர்கள் இன்னும் கோழைத் தனமாகவும் உஷாராகவும் உளர்.

ஒத்துழையாமைத் திட்டத்தின் முதல் படியான அம்சங்கள் யாரைப் பற்றியன வென்றால், ராஜீய விஷயங்களில் ஈடுபட்டவர்களைப் பற்றியனவே. இவர்கள்

பலவருஷங்களாக ராஜீய விஷயங்களில் காலங் கழித்தவர்கள். இவர்கள் ஒருமனமாகக் கூடித் தியாகஞ் செய்வதற்கு உள்ளூரத் தயாராயிருக்கக் கூடியவர்கள்.

பிரிட்டிஷ் சாமான்களை விலக்குவதாயின், தேசத்தாரனைவரும் சேர்ந்து ஒரே காலத்தில் விலக்கின், பலன் கிட்டும்; இல்லையேல், அக்காரியத்தை மேற்போட்டுக் கொள்ளாமலே இருந்து விடவேண்டும். அவ்விலக்கு ஒரு கோட்டையை முற்றுகையிடுவதற்கு சமானம். கோட்டையைக் குலைப்பதற்குத் தேவையான வீரரும் கருவியும் இருந்தால் மாத்திரம், முற்றுகை போடலாம். ஒரு மனிதன் தன் கை நகத்தினால் மதில் சுவரைச் சுரண்டின், அதனால் ஒன்றும் பலனிராது.

ஒரு பட்டதாரி தன்பட்டத்தை விடின், பட்ட மளித்தவனுடைய பாபஞ்சேராமற் கையைக் கழுவி விட்டோமென்று அவன் பரம திருப்தியடையலாம்; பிற பட்டதாரிகள் தம் பட்டத்தை விடாதிருப்பினும், பட்டத்தை விட்டவனுக்குப் பாதகமிராது.

பரவஸ்து பகிஷ்கார மென்பது தண்டனையைக் கருதியதாகும். ஆகவே ஒத்துழையா இயக்கத்துக்கு அது அனுபவத்தில் ஒத்துவராது. தண்டிக்க வேண்டுமென்ற உணர்ச்சியிருப்பின், அது நமது வலிக்குறைவைக்காட்டும் அடையாளமாகும். இந்த உணர்ச்சி ஓங்கின், கதிமோட்ச வழி தடைப்படும்.

தியாக உணர்ச்சியோ வெனில், நமது வலுக்குறைவைத் தொலைத்து விடவேண்டுமென்ற திட புத்தி

யாகின்றது. ஆகவே தியாகஞ் செய்வோருக்கும் தியாகஞ் செய்யும்படி தூண்டுவோருக்கும் அது நன்மை தரும். எல்லாவற்றிற்கும் மேலாக மற்றோர் விஷயம். அதாவது, இந்தியா தனக்கேற்ற வண்ணம் உலகுக்கு ஒரு புத்தி புகட்டவேண்டும். சந்தேகத்துக்கு இடமான மேனாட்டு வழியைப் பின்பற்றினால், உலகினுக்கு ஒரு புத்தி புகட்ட முடியாது. மேலும் தியாகமோ கேவலம் பணத்தைப் பற்றியதாக முடியும். ஆதலால் தியாகம் மாசற்றதாகவும், கடவுள் கண்டு களிப்பதாகவும், இருக்க வேண்டும்.

## 2 கிலாபத்—சுதேசியம்

ஒத்துழையா இயக்கத்தில் சுதேசியத்தைச் சேர்த்தால் அவ்வியக்கத்திற்கே ஊனம்வருமோ என்னவோ என்றையுற்று அரைமனதோடுதான் ஆதரித்தேன். ஆனால் மௌலானா ஹஸரத் மோஹனி தமக்கு அதிலுள்ள திடமான நம்பிக்கையைப் போதித்ததன் பயனாக, என்னையும் அவர் இணங்கச் செய்தார். ஆயினும், அவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்ததற்கு அவருடைய காரணமும் என்னுடைய காரணமும் முரண்படும். சீமைச்சாமான்கள் யாவற்றையும் விலக்கிவிட வேண்டுமென்று அவருக்கு வைராக்கியம் உண்டு. நான் அதை ஆதரிப்பவனல்லன், ஏனெனில் அது அசாத்தியமான

காரியம். பரதேச சாமான்களை விலக்கும் முயற்சி பயன் படாமற் போய் விட்டபடியால், அதற்கடுத்த படியாக அவர் சுதேசியத்தை ஆதரித்தார். சுதேசியத்தை ஒத்துழையா இயக்கத்தில் ஏன் சேர்த்தேன் என்றால்,

ஆத்மதியாகத்தை வலுப்படுத்த ஏற்பட்ட சிட்சா விதியே ஒத்துழையாமை. எந்த ஜாதியானது பரிபூரண தியாகத்துக்குப் பக்குவ மடைகிறதோ அது நிகரற்ற உன்னத பதவிக்கு வரும். தியாகம் எவ்வளவு பரிசுத்தமுள்ளதோ அவ்வளவு சீக்கிரம் பலன் கைக்கெட்டும். சுதேசியந்தான் ஒவ்வொரு ஆண் பெண் குழந்தைக்கும் பரிசுத்த ஆத்மதியாகத்தை மேற்கொள்ள இடந்தருகின்றது. கிலாபத்திற் கிழைத்த அநியாயத்தை நீக்குவதற்கு நம்தேசத்தினர்க்குள்ள ஊக்கத்தையும் மனப்பான்மையையும் அளக்கும் கருவியாகவு மிருக்கிறது. அடிப்படையாயுள்ள இச்சிறிய தியாகஞ் செய்யவும் நம் தேசம் உணர்ச்சி யற்றிருக்கிறதோ? இன்னும் மேனாட்டு நாகரிகத்தில் மயங்கி ஜப்பான் பட்டுக்கும் பிரஞ்சு சரிகைக்கும் ஆங்கில சல்லாத் துணிக்கும் அல்லற் பட்டு மதியழிந்து நிதியிழப்பரா; அல்லது அதற்குப் பதிலாக, நம்மவரால் கைத்தறியிலே கைநூல் கொண்டு நெய்யப்பட்ட சாதாரண நாட்டுக் கதர் ஆடைகளைத் தரித்து நற்கதி பெற மாட்டார்களா?

கோடிக்கணக்கான நம்மவர் சீமைத் துணிகளை உடுப்பதற்கும் படுப்பதற்கும் கையாளுவதைவிட்டுக் கதர் ஆடைகளையே தரிக்கத் தீர்மானிப்பது, நமக்கு

வேண்டிய யாவற்றையும் அளிக்க வல்லக் குன்று வன்மை யும் ஒற்றுமையும் இணையற்ற தியாகமும் சித்தித்துவிட் டன வென்பதற்கு அத்தாட்சியாகும். நம் நாட்டு ஐக்கிய த்தை இதைவிட மேலாக எதைக்கொண்டு புலப்படுத்த முடியும்?

இந்தகைய நிலைமை மனோ ராஜ்யத்தாலாவதன்று; என்னதான் பக்தி இருக்கட்டும், ஊக்கமிருக்கட்டும், உழைப்பிருக்கட்டும், அந்த ஐக்கியநிலைமை ஒருவனால் மாத்திரம் அடையக் கூடியதன்று. இந்தியாவெங்கும் கதர்ஜவளிக் கடைகளை ஏற்படுத்திவிட்டாலும் பயனில்லை. ஆனால் அவ்வப்போது புதிது புதிதாகக் கதர் உற்பத்தி செய்து, தேவையான இடங்களுக்கு அனுப்பி, சரிசம மாக எல்லாருக்கும் கிடைக்கும் வண்ணம் பரவச்செய்ய வேண்டும். அவ்விதம் செய்தால்தான் சுதேசியம் வேரூன்றிப் பரவும். கதர் உற்பத்தியைப் பாருங்கள். லட்சக்கணக்கிலுள்ள நமது பெண்மக்கள் அனைவரும் தம் தம் வீட்டிலேயே நூல்நூற்க வேண்டும். அதற்காகப் பஞ்சு முதலியவற்றை அவரவர் வீடு தோறும் சென்று கொடுத்து நூற்றபின் அந்நூலை விலைகொடுத்து வாங்கிச் சேகரிக்க யோக்கியமாயும் உண்மையாயும் உழைக்க வல்ல ஊழியர்வேண்டும். நூல்நூற்கவேண்டுமானால், ஆயிரக்கணக்கான கைராட்டினங்கள் தேவையாகும்.

இதனால் என்னநேரிடும்? பரம்பரையாக நெய்து வந்த கைக்கோளரிடம் கைநூலைக்கொடுத்து மீண்டும், அவர்களைத் தம்முடைய பண்டைத்தொழிலுக்குத் திரு

ப்பி, அதையே அவர்கள் மேற்கொள்ளுமாறு தூண்டவேண்டும். ஒத்துழையா இயக்கத்தில் சுதேசியத்தைச் சேர்த்த எண்ணம் இதுவே. இதை அலட்சியமாக எண்ணி விடக்கூடாது. ஒவ்வொரு இந்தியனும், வேறு எதுவும் தன்னால் செய்யமுடியாமற்போயினும், கதரைப் பரவச் செய்வதற்கு முன்பு, உற்பத்தி செய்வதில் ஊக்கத்தைக் காட்டினால், சுதேசியத்திற்காக ஏதோ சிறிதளவு அவனும் பாடுபட்டவனாவான். இதுவரையில் உற்பத்தியான கதரைப் பரவச்செய்வதில் மாத்திரம் கவனஞ்செலுத்தினால், அது பிரயோசனமேயில்லை.

## 3. சுயராஜ்ய ரகசியம்

"சுதேசியம் மிகவும் முக்கியம், வியாபாரிகள் இன்னும் அதிகமாகத் தியாகம் செய்யவேண்டும்," என்று காங்கிரஸ் மகாசபை வற்புறுத்தி யிருக்கிறது. இது சரியே.

சென்ற ஒன்றரை நூற்றாண்டாக இந்தியாவிலிருந்து ஏராளமாகப் பணங்கொள்ளை போய்க்கொண்டிருக்கிறது; இக்கொள்ளைக்கு அனுகுணமாகவோ, அதைக் கண்டு சகித்தோ இந்தியர் இருக்கும் வரையில், தேசம் சுதந்திரம் பெறமுடியாது. மேனாட்டுச் சரக்கு விலக்கவென்றால், பரதேச ஆடைகளை நீக்குவதுதான். அன்னியதேசத்

துணியினுல்தான் மிக்க கொள்ளை போகிறது. இக் கொள்ளை நடக்கும்படி நாம் விட்டிருக்கிறேம். வருஷந் தோறும் இதற்காகக் கொள்ளை போகும் பணம் 60 கோடி. அக்கொள்ளையைத் தடுப்பதென்னும் பெருங் காரியத்திஞலேயே சுயராஜ்ய மடையலாம்.

அன்னிய தேசத்திலே துணிநெய்வோரின் பேரா சையைத் திருப்தி செய்விக்க இந்தியாவை அடிமைப்படுத் திவிட்டனர். ஈஸ்டு இந்தியா கம்பெனி என்றஆதிஆங்கில வியாபாரக் கூட்டத்தார் இங்கே வந்தகாலையில், நமக்கு வேண்டிய ஆடைகளை நாமே தயாரித்து வந்தோம்; மற்றும் ஏராளமாக ஏற்றுமதியும் செய்து வந்தோம். இப்போது ஆடைக்காக இந்தியர் அன்னியரிடம் கை யேந்தி நிற்கின்றனர். இந்நிலைமை எப்படி யுண்டாயிற் றென விரித்துரைக்க வேண்டியதில்லை.

நாம் நம் ஆடைக்காக அன்னியரிடம் கையேந்தி நிற்கக்கூடாது. இந்தியர் முனைவராயின், நமக்கு வேண்டிய ஆடையனைத்தையும் நாம் தயாரித்துக்கொள் ளமுடியும். மில்லில் தயாராகும் துணி நம் தேவைக்குப் போதாது. அக்குறையை நிவர்த்திக்கப் போதமான நெசவுகாரர் இருக்கின்றனர். நமக்கு வேண்டிய துணிய னைத்தையும் நெய்ய அவர்களால் ஆகும். மில்லில் தயா ராகும் துணிகளின் அளவை விட நெசவுக்காரரே அதிகமாகத் துணி நெய்கின்றனர். இது பலருக்குத் தெரியாதிருக்கலாம். அன்னிய ஆடைகளை விலக்கிப் பல னடையும் உபாயம் யாதெனில், நூலின் உற்பத்தியை

அதிகப்படுத்தவேண்டும். இதற்கு ராட்டினத்தில் நூலி ழைத்தால் தான் ஆகும்.

பலன் தரத்தக்கதாக விலக்கலிருக்க வேண்டின், அன்னிய தேசங்களிலிருந்து ஆடை தருவிப்பதை வியா பாரிகள் நிறுத்திவிடவேண்டும்; ஏற்கனவே இங்குள்ள சீமைத் துணிகளை வேறிடங்களுக்கு அனுப்பி விற்றுவிட வேண்டும். பஞ்சை ஏராளமாகக் குவித்து லாபமடைய வேண்டுமென்று முயலுவதை விட்டுவிடவேண்டும்; பஞ்சு அனைத்தையும் நம் உபயோகத்திற்காக நிறுத்திக் கொள்ளவேண்டும்.

மில்சொந்தக்காரர்கள் தமது மில்லுகளை லாபத் துக்காக நடத்தலாகாது; தேசியப்பொருள் மூலஸ்தல மென்று மதித்து நேர்த்தியும் ஸன்னமுமான நூல் நூற் பதை விடுத்து, நமக்குத்தேவையான நூலையே நூற்க வேண்டும்.

குடும்பிகள் நேர்த்தியான ஆடையில் ஆசைவைக்கக் கூடாது; நேர்த்தியான ஆடை உடலை மூடுவதில்லை. வெள் ளைக் கதர்த்துணியின் நேர்த்தியையும் மிருதுவையும் மதிக்கவேண்டும். ஓர் உலோபி தன் தனத்தை யெப்படி செட்டாய்க் கையாளுவானே அப்படியே அனைவருஞ் செட்டாய்த் துணியை உபயோகிக்கவேண்டும்.

உடை விஷயமாய்த் தங்கள் ஆசையையும் மனப் போக்கையும் குடும்பிகள் மாற்றிக் கொள்ளினும், நெசவு காரரின் உபயோகத்திற்காகச் சிலர் நூலிழைத்துத் தானகவேண்டும். ஒவ்வொருவரும் தன்ஓய்வு நேரத்தில்

பிரியத்தினலோ பணங்கிடைக்குமென்ற பேராவலி ஞலோ நாற்கவேண்டும். நூற்ருல்தான் தேசவுகார ருக்கு நூலகப்படும்.

நாமோ பாரமார்த்திக வுலகத்தில் முனைந்திருக்கி ரேம். இப்போதுள்ள காலம் ஸாமான்யமான கால மன்று. விசேஷமான காலங்களிலே ஸாமான்யமான அலுவல்களை நிறுத்தி விடுவதுண்டு. ஒரு வருஷத்திலே ஸ்வயராஜ்யம் பெறவேண்டுமானல், வேறெந்த விஷயத் தையும் கவனியாமல் காரியத்திலேயே கண்ணுயிருக்க வேண்டும். ஆதலின் மாணவருக்குநாம்சொல்வது என்ன வென்ருல் ஸாதாரணப் படிப்பை ஒருவருஷம் நிறுத்தி வையுங்கள்; கை நூலிழைப்பதில் காலத்தைச் செலவி டுங்கள்; தேசமாதாவிற்கு அதுசிறந்த ஊழியம்; ஸ்வரா ஜ்யப் போருக்கும் அது பெருமுயற்சியாகும். யுத்தகாலத் திலே துப்பாக்கியையும் பீரங்கிரவையையும் செய்யவே எல்லாத் தொழிற்சாலைகளையும் அதிகாரிகள் உபயோ கப்படுத்தினர். இந்த நம் ஸ்வயராஜ்ய யுத்தத்திலோ தே சத்தின் நலத்திற்காக எல்லாத் தேசியப் பாடசாலைகளும் கலாசாலைகளும் நூலிழைக்குஞ் சாலைகளாக ஆக வேண்டும். இந்தத் தொழிலினல் மாணவருக்கு எந்த நஷ்டமும் ஏற்படாது. இங்கே ஸ்ெகவாழ்வும் ஸ்வய மதிப்பும் கிடைக்கும்படியான வழியேற்படும்.

இந்தியாவிலே துணிப்பஞ்சம் உள்ளது. இப்பஞ் சத்தைப் போக்க உதவிசெய்தல் புகழத்தக்கவேலையாம். அந்நியதேச நூலை உபயோகிப்பது பாவமாயின், சுதே

சிய நூல்விருத்தியை அதிகப்படுத்தியது புண்ணியச்செய லாகும். அவ்வாறு அதிகப்படுத்தினல் அன்னிய நூல் கிடைக்காததால் ஏற்படக்கூடிய தேவையை ஈடு செய்ய லாம்.

நூலிழைத்தல் அவ்வளவு முக்கியமானல், ஏழை களுக்குப்பணம் கொடுத்து ஏன் நூலிழைக்கச் செய்யக் கூடாது? நெசவு, தச்சு முதலிய வேலைகளைப் போல நூலிழைத்தல் ஜீவனோபாயத்திற்கு ஒருதொழிலாக எந்நாளும் இருந்ததில்லை. பிரிட்டிஷார் இத்தேசத்திலே காலடிவைக்குமுன் நூலிழைத்தல் ஸ்திரீகளுக்கு ஒய்வு நேரத்தைக் கழிக்கும் கௌரவமான தொழிலாயி ருந்தது.

நமக்குள்ள காலத்திலே ஸ்திரீகளுள் அத்தொ ழிலைப் பரப்பி விடமுடியாது. தேசமாதாவின் கட்டளை யைமதித்து நடத்தல் பள்ளிக்குப்போகும் பையன்களுக் கும் பெண்களுக்கும் மிக்க சுலபமாகும். நூலிழைக்கும் தொழிலானது மனிதர்களுக்கோ, மாணவர்களுக்கோ கௌரவக் குறைவானதென யாரும் மதிக்கவேண்டாம். அதுமுன்னம் ஸ்திரீகளின் பிரத்தியேக கைத்தொழிலா யிருந்தது. ஏனெனில் அவர்களுக்கு அதிக ஒய்வுநேரம் இருந்து வந்தது. நூலிழைப்பதில் கஷ்டமில்லை. அது இன்பமானது. ஆதலின் ஸ்திரீகளே நூலிழைத்துவந்த னர். நூலிழைப்பதால் ஸ்திரீகளின் சன்மார்க்கம் பெரு கும்; பஞ்சத்துக்கும் பரிகாரமாகும்; விலையும் மலிவாகும். இதில்சுயராஜ்யபாக்கியமும் இருக்கிறது. அன்னியதேசத்

த்துணி பெயர்போனது என்ற பேயாட்டத்தில் நம்முன்னோர் மயங்கி வீழ்ந்துவிட்டனர். அதற்காக நாம் செய்யக்கூடிய சாதாரணமான தவம் நூலிழைப்பதே. பள்ளிக்குச் செல்வோர் நூலிழைப்பின் அத்தொழிலுக்கும் கௌரவம் ஏற்படும். கதர் ஆடையே யாவருக்கும் பிடித்தமான ஆடையாகவும் வந்துவிடும். தன்னுடைய குழந்தை நூற்றநூலாகிய ஆடையை எத்தாயாவது தகப்பனாவது அணியாதிருப்பாரோ! மாணவர் நூலிழைக்கும் தொழிலில் கவனஞ் செலுத்தின், நெசவுக்காரருக்கும் கவனம் ஏற்படும். பஞ்சாபியரோ சேனையில் சேர்ந்து, அன்னியதேசத்துக்குப் போய் நிரபராதிகளைக் கொல்லும் வீரர் என்ற தொழிலில் இருக்கின்றனர். அத்தொழிலிலிருந்து அவர்களை விடுவிக்கவேண்டுமானால் நெசவுத்தொழிலை அவர்களுக்கு அளிக்கவேண்டும். தேசிய பாடசாலையிலே புதியதாக நான் என்ன ஏற்படுத்தப் போகின்றேன் என்று பல மாணவர் என்னைக் கேட்டிருக்கின்றனர். நூலிழைப்பதையே ஏற்படுத்தப் போவதாக அவர்களுக்கு நான் சொல்லியுள்ளேன். சுயராஜ்யமடைவதற்கு இடைநடுவிலுள்ள காலத்திலே நூலிழைப்பதிலும், இன்னும் சில காரியங்களிலுமே நாம் கவனம் செலுத்தியாகவேண்டும். அப்பொழுதுதான் முன்னம் அசட்டையாக இருந்ததற்குப் பிராயச்சித்தம் செய்வது போலாகும். சுயராஜ்யம் ஏற்பட்டதும் புதியபாடங்களைப் பழக்க அப்பொழுதுதான் மாணவர் இன்னும் மிக்க திறமையும் தகுதியும் பெறுவர்.

முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டை போடவா நான்முயலுகிறேன், மில்லுகளைப் போக்கி கைநூலிழைப்பையும், கைநெசவையுமா நிலைநாட்டப் பார்க்கிறேன். ரயில் வண்டிகளை விடுத்து நாட்டுக்கட்டை வண்டிகளையா பிரபலமாக்க முயலுகிறேன். யந்திர சாதனங்களை அடியோடு ஒழித்துவிடவா விரும்புகிறேன். சில பத்திரிகாசிரியர்களும், பிரமுகர்களும் அவ்வாறு என்னைக் கேள்வி கேட்டிருக்கின்றனர். அவைகளுக்கு என் பதில் என்னவென்றால், யந்திரங்கள் தொலைந்துவிடின் அதற்காக நான் அழமாட்டேன். அது மகத்தானதோர் விபத்து என்றும் நான் கருதமாட்டேன். எனினும் யந்திரங்களைத் தொலைத்துவிடவேண்டுமென்பது எனக்குக் கருத்தில்லை. என் விருப்பம் வருமாறு:—மில்களினின்று தயாராகும் நூலும் துணியும் போதாமல், இன்னும் அதிகமாக அவை உண்டாக வேண்டும். இந்தியாவிலிருந்து வெளியே அனுப்பப்படும் லக்ஷோப லக்ஷக்கணக்கான பணம் நிற்கவேண்டும். அப்பணம் நம் குடும்பங்களுக்குக் கிடைக்கவேண்டும். தேசத்தினர் தங்களது ஓய்வு நேரத்தில் நூலிழைக்காமற் போயின் அங்ஙனம் செய்யமுடியாது. அங்ஙனம் செய்ய வேண்டின், நூலிழைப்பதை ஒரு ஜீவனோபாயமாகக் கொள்ளாமற் போயினும் ஒருகடமையாகவாவது கருதி அதைப் பிரபலப் படுத்தவேண்டும்.

# 4. புதிய சகாப்த உதயம்

நூலிழைப்பதிலும் நெய்வதிலும் சுலபமான வழியைப் பிரபலப் படுத்த மகாத்மா விரும்புகிறார். அவ்விருப்பம் தற்கால நாகரிகப் பயனாகிய சிக்கலான யந்திரசாதனங்களைப் போக்குவதாம். ஆகவே அது குற்றமாம். இவ்வாறு அவரது தோழர்களிற் சிலரும் குணதோஷிகளிற் சிலரும் கூறுகின்றனர். அவர்களுடைய ஆக்ஷேபத்துக்கு காரணம் என்ன? அச்சுலபமான வழிகள் நன்னிலைமைக்கான முன்னேற்றத்துக்கு அனுகூலமல்லவாம்; நாகரீகத்தின் ஆரம்பப் படிக்குத் திரும்புவதாகுமாம்.

யந்திரசாதனங்கள் வரவர வளருவதையும் யந்திரசாதனத்தொழில்முறை ஏறுவதையும் கண்டு அவர் கண்டிக்கிறார். இது கனவுகாண்போனின் பைத்தியச் செயலாகுமெனவும் அனுபவத்தில்நடவாத லக்ஷியகர்த்தாவின் காரியமெனவும்பலர் தோஷஞ்சொல்லுகின்றனர். இத்தோஷம் விரோதமே. ஐரோப்பிய யுத்தத்தின் மகாகோரத்துக்கும், யந்திரசாதனத்தொழில்முறையின் மானக்கேட்டுக்கும் காரணமான நாகரிகத்தினிடம் அவர்களுக்குப் பிடிப்புளது. எக்காலத்திலும் நிலைநிற்கும் வண்ணம் செய்வதற்கு இந்தத் தற்கால நாகரிகம் அவ்வளவு விரும்பத்தக்கதா?

மனித சமூகத்தின் சரித்திரத்தை நோக்கின் ஒவ்வொரு நாகரிகமும் ஒரளவு உச்சஸ்தானம் அடையும், அப்பால் அடியோடுமறையும்; ஏனெனில், புதியதாகவும்

இன்னும் உயர்ந்ததாகவுமுள்ள நாகரீகம் உதிக்கவேண்டும்.

உரோமர்களின் வீரத்தனமான நாகரிகம் உதித்தபின்பு அதற்கு முந்திய பாபிலோனிய நாகரிகம் மறையலாயிற்று. அப்பால் தற்கால நாகரிகத்துக்கு இடங்கொடுக்க, உரோம நாகரிகம் நசித்தது. எனவே, ஒவ்வொருநாகரீகமும் மறையத்தான் வேண்டும். பழைய அமைப்பு அடியோடு நசித்தாலன்றிப் புதிய உயரிய அமைப்பை ஏற்படுத்த இயலாது. புதியஅமைப்பு நிலைபட பழைய அமைப்பின் சேஷமும் போகவேண்டும்.

தற்கால நாகரிகத்தைப் பற்றியோ வென்றால், அது அடியோடு தவறிப் போய்விட்டது; கல்லறைக்குப்போகுந்தருவாயிலுமிருக்கிறது. காலத்தின் குறிகள் அங்ஙனமே கூறுகின்றன. ஆதலின் இயற்கையிலேயே தற்கால நாகரிகம் சிதறிப் போகையில், அதை இழுத்துப்பிடித்து வைக்க ஏன் முயலவேண்டும்? அவ்விதம் முயலுமிடத்து அது சரித்திர போதனைக்கு முற்றிலும் மாறாகும்.

எல்லாவித நாகரிகத்துக்கும் பேர்போனதாயுள்ள எந்தமுயற்சியையும் ஆதரிக்க வேண்டாமோ? இனியுதிக்கப்போகும் பாரமார்த்திக நாகரிகம் தனக்குரிய நிலத்தில் கிளம்பும் வண்ணம், மகாத்மா காட்டும்நேரான வழியை நாம் மனக்களிப்புடன் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

வாழ்வு படாடோபமின்றியிருக்க வேண்டும். பாத்திரசாதனமும் சிக்கலாயில்லாமல் சுலபமாயிருக்கவேண்

டும் என்று அவர் வற்புறுத்திவிளம்புதல் இனிவரும் புதிய சகாப்த உற்பத்திக்கு மிகஅவசியம். வருங்கால நாகரிகத்திலே எல்லாருக்கும் சமமான வாழ்வு உண்டாகும். ஆடம்பரத்துக்கும் படாடோபத்துக்கும் இடமாய் இயற்கைக்கும் மாறாகவுள்ள வாழ்வு அடியோடு வேரற்றுப் போகும்.

படாடோபமற்ற சுலப வாழ்வே பாரமார்த்திக முதிர்ச்சிக்கு அனுகூலம். ஆதலின் இதற்கு முன்னிருந்த நாகரிகத்துக்கெல்லாம் உயர்ந்த நாகரிக காலம் வரப்போகிறது. இதற்கு சுலபமான வாழ்வை நாம் மேற்கொள்ள வேண்டும். மேல்நாட்டு நாகரிகம்போய் விடுகிறதேஎன்றும் அஞ்சவேண்டாம். ஒருகாலத்தில் வன்மை பெற்றிருந்த நாகரிகங்களெல்லாம் அப்பால் வீழ்ந்து மடிந்து போயிருக்கின்றன. இது சரித்திர அனுபவம்.

பாபிலோனிய நாகரிகம் உன்னதப்பதவியடைந்த பின்பு நாகரிகமேயில்லையென்னும் வண்ணம் அது மறைந்தது. உடனே உரோமநாகரிகம் உதிக்கலாயிற்று. உரோமநாகரிகம் உச்சஸ்தான மடைந்திருந்த காலத்திலே அது பாபிலோனிய நாகரிகத்தின் உயர்பதவியைவிட மேலாகவிருந்தது. அவ்வாறேதான் தற்கால நாகரிகமும். இத்தற்கால நாகரிகம் சூனிய மானுலன்றி, பாரமார்த்திக லக்ஷியங்களைக் கொண்டு புதிய நாகரிகம் பக்குவமாய்ப் பரவுவதற்கில்லை. எல்லா நாகரிகங்களும் உதிக்கும் காலத்திலிருந்த நிலைமைக்கு தற்கால நாகரிகத்தையும் கொண்டு வந்துவிட மகாத்மா காந்தி முயலுகிறாரென்று குற்றஞ்

றவோ ரனைவரும் சரித்திரத்தை நோக்குவாராக. புதிய சகாப்தம் உதிக்கும் தருணத்தில் நாம் இருக்கிறோம். நேர் வழியைக் காட்டும் தலைவர் அவர்தான். மற்றவர்களோ மேனாட்டுநாகரீகத்தை நிலைநாட்ட விரும்புகிறார்கள். அவர்கள் எப்படி யிருக்கின்றனரென்றால், பட்டுப் போகும் செடியின் வேரில் நீர் ஊற்றாமல் இலையில் நீரூற்றும் தோட்டக்காரன் போலிருக்கின்றனர். மகாத்மா காந்தியோ வேரில் நீர் ஊற்றித் தழைக்க வைக்கிறார்.

## சுதேசியம்.

"கைராட்டினத்தின் கானம்" என்று நான் ஒருவியாசம் எழுத, அதன்மேல் 'லீடர்' பத்திரிகை மனோதோஷங் கூறியுளது. மேலும் நான் கருதாத விஷயங்களையெல்லாம் அது என்தலைமேல் சுமத்தியிருக்கிறது. ஆதலின் சுதேசியத்தின் உண்மையான விசேஷத்தை அறிந்துகொள்ள தப்பபிப்பிராயங்கள் சிலவற்றைப் போக்கவேண்டும். மில்துணியையும் மில்நூலையும்போக்கிக் கைநூலையும், கைநெசவையும் நிலைநிறுத்திவிட நான் முயலுகிறேனும். முயன்று முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போடுகிறேனும். அம்மாதிரியான முயற்சியெதுவும் நான் செய்யவில்லை. மில்களுடன் எனக்குச் சச்சரவு கிடையாது. என்னுடைய கருத்துக்கள் மிகவும் சுலபமானவை. வருஷமொன்றுக்கு நம்மில் ஒவ்வொருவருக்கும் தேவையுள்ள

மொத்தத்தில் பாதியளவுக்குக் குறைவான துணியையே நாம் தயாரிக்கிறோம். நமக்குத் தேவையான பஞ்சு அவ்வளவும் இங்கேயே விளைகிறது. ஜப்பானுக்கும் லங்காஷயருக்கும் லட்சோப லட்சக் கணக்கான பஞ்சு மூட்டைகளை நாம் அனுப்புகிறோம். அனுப்பி அதனாலாகிய துணியை மீண்டும் பெறுகிறோம். எனினும் நூலிழைப்பதாலும், கைநெசவுசெய்வதாலும், நமக்கு வேண்டிய அளவு நூலையும் துணியையும் நாமே தயாரித்துக்கொள்ள முடியும். இந்தியாவின் முக்கியத் தொழிலாகிய விவசாயத்துடன் ஓர் துணைத்தொழில் அவசியம் வேண்டும்.

லட்சக்கணக்கான ஜனங்களுக்கு நூலிழைப்பது துணைத்தொழிலாக முடியும். ஒரு நூற்றாண்டுக்கு முன் அது தேசியத்தொழிலாக இருந்து வந்தது. கையினால் நூலிழைப்பதையும் நெசவையும், யந்திர சாதனங்களும் பணக்கஷ்டமும் அமுக்கிவிட்டன வென்பது உண்மையல்ல. ஈஸ்டு இந்தியா கம்பெனியின் ஆதி ஆங்கில வியாபாரக்கூட்டத்தினரின், சன்மார்க்கக்கேடான விசேஷ உபாயமே தொழிலை அமுக்கிவிட்டது. நெசவுக்காரர்கள் நடை மாறி பிரயாசை எடுத்துக்கொள்ளின், அத் தேசியத் தொழிலை நாம் உயிர்ப்பித்துவிடலாம். மில்லுகள் அதிகப்பட்டு அதனால்துணிக் குறையை ஈடுபடுத்திவிடமுடியாது. கையினால் நூலிழைப்பதையும் நெய்தலையுங் கொண்டு நாம் அக்கஷ்டத்தைப் போக்கிவிடலாம். இந்த ஜீவனோபாயம் திரும்ப ஏற்படின் வருஷந்தோறும் நம்தேசத்திலிருந்து போகும் அறுபது

கோடி ரூபாயை இங்கேயே நிறுத்தலாகும். லட்சக்கணக்கான ஸ்திரீகட்கு அத்தனம் கிடைக்கும்படி செய்யலாம்; இந்தியாவின் பரம ஏழ்மைக்கு ஒருவிதத்தில் சுதேசியம் பரிகாரமாகும். மழையில்லாக் காலத்தில் நேரும் கஷ்டத்தைப் போக்கவும் அது சாதனமாகும். அவ்விதம் உயிரூட்ட இரண்டுவிஷயங்கள் அவசியம். அவையாவன:—கதர் துணியில் ஜனங்களுக்குப் பலன் உண்டாகும்படி செய்ய வேண்டும். அதோடு பட்டைபோட்ட பஞ்சை வினியோகஞ் செய்து இழைத்த நூலைவாங்க ஒரு சபைவேண்டும்.

ஒருவருஷம் சிலர் சந்தடியின்றி வேலைசெய்ததால் கூர்ஜ்ஜரத்திலே பல்லாயிரக்கணக்கான ஸ்திரீகளுக்கு அநேக ஆயிரம் ரூபாய் கிடைக்கலாயிற்று.

தங்கள் குழந்தைகளுக்குப்பால் வாங்குவது போன்ற காரியங்களுக்கு நாள்தோறும் சில அணு கிடைக்கிறதே யென்று அவர்கள் சந்தோஷப்படுகின்றனர்.

'லீடர்' பத்திரிகை சொல்லியிருப்பினும், சர்க்கரைத் தொழில் அம்மாதிரி ஆகாது. நமக்குத் தேவையான அளவு சர்க்கரை செய்யப்போதுமான சரும்பு இங்கே விளையவில்லை. சர்க்கரைத்தொழில் ஒருநாளும் தேசியத் தொழிலாக இருந்ததில்லை. இந்தியாவில் தயாராகும் சர்க்கரையை அன்னிய தேசச்சர்க்கரை அமுக்கிவிட்டதாகச் சொல்ல முடியாது. வரவர இந்தியாவிலே சர்க்கரை அதிகம் தேவையா யிருக்கிறது. ஆதலால் வெளியிடங்களிலிருந்து சர்க்கரை தருவிக்கப்படுகின்றது. ஆயினும்

அன்னிய தேசத் துணிகளினுல் எவ்வளவு பணம் கொள்ளை போகிறதோ அவ்வளவு பணம் சர்க்கரையால் போகவில்லை. சர்க்கரை உற்பத்தியை அதிகமாக்கவேண்டுமானுல் கரும்புச் சாகுபடியைச்சாஸ்திரவிதியினுல் விருத்திசெய்யவேண்டும். கரும்பைப் பிழிந்து சுத்தஞ் செய்ய யந்திரங்களும் வேண்டும். எனவே சர்க்கரைத்தொழில் பழைய சுதேசியத்தொழிலுக்கு மாறுபட்ட நிலையிலுள்ளது. சுதேசியச் சர்க்கரையையே உபயோகிப்பது நல்லதுதான். சுதேச துணியை உபயோகிப்பதோ மிக்க அவசரமான அவசியம்.

## சுதேசியம்

சென்ற 18 மாதகாலமாக சுதேசியப் பிரசாரம் கூடுமானவரையில் ஏற்பாடான ஒழுங்குடன் நடந்து வருகிறது. அதனுல் கிடைத்த பலன்கள் ஆச்சரியமாய் உள; சந்தோஷத்திற்கும் இடமாகும். பஞ்சாப், மதராஸ், பம்பாய் ஆகிய இவ்விராஜதானிகளிலே சுதேசியம் வலுவாய் விட்டது. அவ்விடங்களிற் கையினுல் நூலிழைத்தலும் நெசவு செய்தலும் வெகுவிரைவாக விருத்தியாகி வருகின்றன. இதற்குமுன் எந்தவேலையும் செய்திராத ஏழைஸ்திரீகளிற் பலருக்கு ஆயிரக்கணக்காகப் பணங் கிடைத்திருக்கிறது. இத்துறையில் இன்னும் அதிகமாக வேலை நடக்கவில்லை

யென்றால், உழைப்பாளிகள் இல்லாத குறையே அதற்குக் காரணம்.

சுதேசியத்திலே மூன்று வகையான சபதங்களையும் சுதேச பண்டசாலைகளையும் பிரபலப் படுத்தியதனால், சுதேசிய உணர்ச்சி ஓங்கியிருக்கிறது. அம்மூன்று சபதங்களிலே ஒன்றுபட்டுப்போதும். அல்லாமல் துணி விற்பனைக்காகப் பண்டக சாலைகள் ஏற்படுத்த வேண்டும் என்று வற்புறுத்த இனிமேல் முடியாது. சுதேசியப் பிரசாரங் காரணமாக நூலும் துணியும் விலையேறிவிட்டன; எனவே, நூலும் துணியும் அதிகமாக உற்பத்தியாகாமற் போயின், சுதேசிய நோக்கம் ஈடேறமாட்டாது. தேசத்திற்கு உண்மையான பலன் கிடைக்கவேண்டின், சுதேசத்துணியையே அணியவேண்டுமென்று ஜனங்கள் கருதத்தொடங்கவேண்டும்.

சுதேசியத் துணிகளும் வரவரக் கிளம்பி அதிகரிப்பதற்கு ஏற்றவாறு அதிகத் துணி கிடைக்கும் வண்ணம் வழிதேட வேண்டும். இதற்கு ஒருவழி மில்லுகளைப்பெருக்குவதே. ஆனால், முதலாளிகளுக்கோ உதவி தேவையில்லை. மில்லுகளில் தயாராகும் துணிகளை விட அதிகமாகத் துணிகள் தேவையென அவர்களுக்குத் தெரியும். மில்லுகளும் புற்றீசல் போல் கிளம்பி விடமுடியா. வெளியிடங்களிலிருந்து யந்திரங்கள் வந்தாகவேண்டும். துணிநெசவுக்காக இதரதேசங்களிலிருந்து யந்திரம் வருவதை இந்தியா எதிர் நோக்கியிருப்பின், உண்மை

யில் செல்வ நிலையிலே இந்தியா சுதந்திரம் பெறமுடியாது.

ஆதலால் மிகப் பரிசுத்தமாகவும், ஜனங்களுக்கு அனுகூலமாகவும், சுதேசியத்தைப் பரப்பவேண்டின், கை நூலிழைப்பையும் நெசவையும் நாம் வளர்க்கவேண்டும். அவ்விதம் தயாரான நூலையும் துணியையும் கிரமமாக வினியோகிக்கவேண்டும். கொஞ்சம் பக்தியும் உழைப்பும் இருப்பின், அதுசுலபத்தில் ஆகும். ஒவ்வொரு குடும்பமும் தனக்குவேண்டிய சாப்பாட்டைத் தானே தயார் செய்துகொள்ளுகிறது. அப்படியே தனக்குவேண்டிய நூலையும் தயாரித்துக்கொள்ளலாம். ஒவ்வொரு வீட்டாரும் தம் உணவைத்தாமே தயாரித்துக்கொள்ளினும், சாப்பாட்டுக் கிளப்புகள் பிரபலமாயிருப்பதுபோல், மில்லுகளும் பிரபலமாகலாம்.

சாப்பாட்டுக் கிளப்புகள் தற்செயலாய் மூடப்படினும், நாம் பசியால் வாடோம். மில்களாடாதபடி மேனுட்டார் தடைசெய்துவிடினும், கைநெசவும் நூலும் இருப்பதால், நாம் நிர்வாணிகளாக ஆய்விடமாட்டோம்; சிறிது முயற்சியும், ஒழுங்கான ஏற்பாடும், தியாகமும் இருப்பின், மீண்டும் நாம் பொருளாதார சுதந்திரம் அடைந்துவிடலாம்.

எனவே, உண்மையான சுதேசியம் எது? ஒவ்வொரு வீட்டிலும் ராட்டினம் ஓடப்பார்ப்பதும், ஒவ்வொரு குடும்பமும் தனக்குரிய நூலைத் தானே தேடிக்கொள்

வதுமாகும். பஞ்சாபிலே பல ஸ்திரீகள் அங்ஙனமே செய்கின்றனர். நமக்கு வேண்டிய ஆடையனைத்தையும் நாம் தயாரிக்க முயலாமற் போனாலும், கோடிக்கணக்கான தொகையை மிச்சம் பிடிக்கலாம். கை நூலிழைப்பையும் நெசவையும் அதிகப்படுத்துவதுதான் சுதேசியமேயன்றி வேறன்று. கை நூலிழைப்பையும் நெசவையும் நாம் மேற்கொள்ளாமற் போயினும் உண்மையான சுதேசியம் என்னவென்றுவது உணர்ந்து கொள்ளவேண்டும்.

காந்திக்குல்லாய் தரிப்பதை இந்தியாவின் பலபாகங்களிலே அதிகாரிகள் தடுத்து வருகின்றனரென்பது பிரசித்தம். பீஹாரிலே ஒரு மாஜிஸ்டிரேட்டானவர் பரதேசத்துணி விற்கும்படி ஆட்களை அனுப்பினதாக நான் அறிவேன். தார்வாரில் பெயர் வாங்கிவிட்ட மிஸ்டர் பெயிண்டர் என்பவரோ ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

அதாவது:— கலெக்டருக்கும் ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்கும் உட்பட்ட உத்தியோகஸ்தர் அனைவரும் ஜனங்களுக்கு என்ன உணர்த்தவேண்டு மென்றால், தேவைக்குக் குறைவாகவே இந்தியாவில் துணி தயாராகிறது. ஆகவே அன்னிய ஆடைகளை விலக்குவதும், கொளுத்துவதும், வெளியிடங்களுக்கு ஏற்றுமதி செய்வதும், விலையை மிகவும் எற்றிவிடும். இந்த விலையேற்றத்தால் ஒழுங்கீனமும் கொள்ளையும் நடக்கும்.

இந்தப் பலாபலனுக்குப் பாத்திரம் கவர்ன்மெண்டன்று, மிஸ்டர் காந்தியின் பிரசாரமாகும்.

இன்னும் அந்த அறிக்கையிலே இரண்டு விஷயங்கள் உள; அவ்விரண்டிலும் சுதேசியப் பிரசாரத்தை எதிர்ப்பதற்கான வழிகள், அவை மகாநாடு கூட்டுவதாகும், பகிஷ்காரத்திற்கு எதிராகவுள்ள வியாபாரிகள் குறிப்பிட்ட சாலத்திலே கலெக்டரின் காரியாலயத்திற்கு வருவதாம். சென்னைக் கவர்ன்மெண்டாரோ இன்னும் விசித்திரமான அறிக்கையிட்டுளர். இந்த அறிக்கைகளின் நோக்கமென்ன வென்பது வெளிப்படை. பகிஷ்காரத்தை ஆதரிக்கவேண்டா மென்று வியாபாரிகளையும் வாங்குவோரையும் கட்டாயப்படுத்துவதாகும். அப்படியானால் அறிக்கையை வெளியிட்ட அதிகாரிகளால் கருதப்படாத அளவு ஜனசுதந்திரத்தைச் சில்லறை அதிகாரிகள் பறித்துவிடுவர். என்றாலும் இப்பயமுறுத்தலைக் கண்டு ஜனங்கள் மயங்கிவிடமாட்டார்கள்; அதிகாரிகள் எதிர்ப்பு பகிரங்கமாகவோ, அந்தரங்க மாகவோ, கௌரவமாகவோ இருப்பினும், சுதேசிய இயக்கம் நடந்து கொண்டுதானிருக்கும்.

ஒழுங்கீனமும் கொள்ளையும் நேருமென்று அதிகாரிகள் பயப்படினும், அவைகளைத் தடுப்பதற்கு வழியென்ன? ஜனங்களுடன் சேர்ந்து, அதிகத்துணி உற்பத்தியாகும்படி செய்வதே. இந்த வழியை அறியாமல், அதிகாரிகள் மிக்கப் பிடிவாதமும் மடமையும் கொண்டி

ருக்கின்றனர். அன்னிய ஆடை கூடாதென்ற கிளர்ச்சி அவசியமும், விரும்பத்தக்கதுமாகுமென்பதை அவர்கள் உணராமல், அதை ஒரு தீமையென்று கருதி அடக்கிவிடப்பார்ப்பர். இப்படி அவர்கள் செய்யும்பொழுது, நலமான கிளர்ச்சியை அடக்கப் பார்க்கும் ஆட்சி முறையைத்தான் துராட்சியென்று நான்சொல்லின் அவர்கள் புகார் கூறுகின்றனர்.

சுதேசியத்துணி தட்டுவானேன். போதுமான பஞ்சு இந்தியாவில் இல்லையா, என்ன? நூல்நூற்று நெய்வதற்குப் போதுமான மனிதர்களும் ஸ்திரீகளும் இல்லாமலா போய் விட்டனர்? வேண்டுமளவு ராட்டினங்களைச் சில தினங்களில் செய்து விடமுடியாதோ? ஒவ்வொரு குடும்பமும் தன் ஆகாரத்தைத் தானே தயாரித்துக்கொள்வது போல், தனக்குவேண்டிய ஆடையையும் தயாரித்துக் கொள்ளக்கூடாதோ? பஞ்சத்தால் வருந்துவோருக்குப் பஞ்சகாலத்திலே தானியத்தைமட்டும் வினியோகஞ்செய்வதில்லையா? அங்ஙனமே, ஆடையில்லாதிருப்போருக்குப் பஞ்சை வினியோகம் செய்யக்கூடாதோ? மில்களின் உதவியின்றி ஒருமாதகாலத்திலே வேண்டுமளவு துணியைத் தயாரித்துக் கொள்ள இந்தியாவினால் ஆகும். இப்படியிருக்க, துணிப்பஞ்சம் உண்டாய் விடுமென்று பாசாங்கு செய்வதேன்? பயப்படுவதேன்?

இதுவரையில் ஜனங்களை வேண்டுமென்றே சுதேசியத்தில் மடமையுடன் வைத்திருந்தனர். வேண்டுமளவு

துணியை இந்தியாவில் தயாரித்துக் கொள்ள முடியாதென்று தப்பாக இந்தியருக்குப் போதித்து வந்திருக்கிறார்கள்.

அந்த அறிக்கைகளுக்கும் ஜனங்கள் தக்க பதில் அளிப்பரென்று நம்பியுள்ளேன். உடனே ஜனங்கள் அன்னிய ஆடைகளையெல்லாம் கொளுத்தி, தங்களுக்கு வேண்டுமளவு நூற்கவும் நெய்யவும் தொடங்கத் தலைப்படுவராக. சோம்பேறியாக இல்லாதவனுக்கு இது மிகவும் சுலபம்.

## பஞ்சாபில் சுதேசியம்

பாரத ஸ்திரீ மகாமண்டலம் என்னும் சபைக்குப் பஞ்சாபிலே ஒரு கிளைச்சபை யுளது. பம்பாயிலிருந்து ஸ்ரீமதி சாரளாதேவி லாகூருக்குப் போனது முதல், நடந்த நடவடிக்கைகளைப்பற்றி ஓர் அறிக்கை எனக்கு வந்திருக்கிறது. லாகூரிலே வெவ்வேறு இடங்களில் ஸ்திரீகளுக்கென்று மூன்று மகாநாடுகள் கூட்டப்பட்டன. நூற்றுக் கணக்கான மாதர் கூடி, ஸ்ரீமதி சாரளா தேவியின் பிரசங்கத்தை ஆவலுடன் கேட்டனர். இந்தியாவின் பரம ஏழ்மை நிலையைப்பற்றியே அவர் பேசினார். ஏழ்மைக்குக் காரணம் இன்னதென்று அவர் சொல்லி, சுதேசியத்தை நாம் கைவிட்டதே ஏழ்மைக்கு முதல் காரணமென்றார். எனவே, அதற்குப் பரிகாரம் சுதேசியமே.

தான் அணிந்திருக்கும் கதர் ஆடையே சுதேசியத்தை முதன்மையாக வற்புறுத்தியதெனவும், அதற்கடுத்த படியாகத்தான் தனது பாட்டும் பேச்சுமெனவும், ஸ்ரீமதி சாரளா தேவி எனக்கு எழுதியிருக்கிறார். லாகூர் ஸ்திரீகள் அவரைச் சுற்றிக் கொண்டு அவரது அழகிய வெண்மையான புடவையைத் தொட்டுப் பார்த்து, ஆச்சரிய மடைந்தனர். நேற்றுவரை நேர்த்தியான பட்டாடை தரித்திருந்து, இன்று கதர் ஆடை தரித்திருக்கிறாரே யென்று சில ஸ்திரீகள் பரிதாபப்பட்டார்கள். அதற்கு, "அன்னிய தேச மெல்லிய ஆடைகள் எனக்குப்பளுவாய் இருக்கின்றன. ஏனெனில், ஆடைக்காக அன்னியரிடம் கையேந்தி நிற்கிறோமென அது அறிவுறுத்துகிறது. முரடான கதர்ஆடையோ இலேசாய்உளது, ஏனெனில் என்னுடைய சகோதரரும், சகோதரிகளும் தயாரித்த ஆடை" யென்று ஸ்ரீமதி பதில் சொன்னார்.

இதைக்கேட்டு ஸ்திரீகளிற் பலர் பரவசமாயினர். ஆகி, அன்னிய ஆடைகளை விலக்கிவிடுவதாகத் தீர்மானித்தனர். சுதேச சாமான்களை வாங்குவதற்கு அனுகூலமாக ஒரு கடை வைக்கவேண்டு மென்றும் அவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்கப்பால் பல மகாநாடுகளிலே சுதேசியத்தைப் பற்றி அவர் பேசியிருக்கிறார். ஸயால்கோட்டை ஜில்லா கான்பரன்ஸிலே அவர் பிரசங்கஞ் செய்தார். ஸ்திரீகளுக்கென்று தனியே ஒரு மகாநாடு கூட்டப்

பட்டது. அதில் ஆயிரம்பேர் பிரசன்னமாயிருந்தனர். இதிலும் அவர் பேசினர், ஸ்ரீமதி சாரளாதேவியின் முயற்சியில் பாஞ்சால ஆண்மக்களும், கலந்து கொண்டு உதவிபுரிவரென நினைக்கிறேன். தக்கவாறு சுதேசியக் கடைகளை ஏற்படுத்தவும், சுதேசியப் பிரசாரம் செய்ய வும், அவருக்கு மதியும் மனமும் உள. பாஞ்சால ஆண்மக் கள் இவற்றை நன்கு உபயோகித்துக் கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு நாளும் ஓரளவு தேசச் செல்வத்தைப் பெருக்கும். பலதுளி பெருவெள்ளம். வேண்டுமளவு கதர் ஆடையைத்தயாரிக்காமற் போனல், விலை யேறிவிடும். இப்போது தேவையைக் காட்டிலும் உற்பத்தியானது குறைவு. ஆகவே அதிகமாகத் துணியைத் தயாரிக்காமற் போனல் அன்னிய தேசத்திலிருந்து இறக்குமதி செய்து தானகவேண்டும். இது மனவருத்தத்துக்கும் பாவத்துக் கும் இடமாகும்.

பஞ்சாபிலே நல்ல பஞ்சு விளைகின்றது. நூலிழைக் கும் தொழில் நசித்து விடவில்லை. ஒவ்வொரு பஞ் சாபிய ஸ்திரீக்கும் நூலிழைக்கத் தெரியும். இருஷி களின் விசேஷ ஸ்தலத்திலே ஆயிரக் கணக்கான நெசவுக்காரர் இருக்கின்றனர். தங்களிடமும், தங் கள் ஸ்திரீகளிடமும் தலைவர்களுக்கு நம்பிக்கை தான் வேண்டும். பம்பாயிலிருந்து கதர் ஆடை தருவிக்க நேரும் என்று ஸ்ரீமதி எழுதியதைக் கேட்டு, எனக்கு வருத்தம் உண்டாயிற்று. தனக்குரிய ஆடையனைத்தையும்

தயாரித்துக் கொள்ள பஞ்சாபிலே மூலப் பொருளும் தொழில் ஞானமும் உண்டு; மனிதரும் உளர்; பஞ்சாபிலே வீரமுள்ள வியாபாரிகள் உளர். போதுமான முதலும் உளது. ஆனால் மனம், உளதா? தலைவர்கள் இப்பெரிய சுதேசிய இயக்கத்தில் உழைப்பராயின், அங்கே சுதேசியம் ஒழுங்காய் விடும். இங்ஙன மிருக்க பம்பாயிலிருந்தா பஞ்சாபுக்கு ஆடைபோவது?

சுதேசியத்தை நன்கு உருப்படுத்தியும், பாஸ்வர்த் ஸ்மித் போன்றவர்களின் தீச்செயலைப்போக்கியும், பஞ்சாபியர் தம்மைச் சீர்திருத்திக்கொள்ளவேண்டும். அப்பொழுது தான், பஞ்சாபின் பொருளாதாரம் நிலைக்கும்; ராஜீய விஷயமும் நிதானப்படும், ஆதிகாலத்திலே பஞ்சாப் இதர இடங்களுக்கு வழிகாட்டியது, மீண்டும் அப்படி ஆகுமா? பஞ்சாபியர் பார்வைக்கு வீரர்கள் ; ஒரு கணமும் தாழாமல் நிர்வாகத்தில் பரிசுத்தம் உண்டாகும் வண்ணம் முயல அவர்களுக்கு வீரம் இல்லையா ?

இந்தியாவின் செல்வத்தைக் கொள்ளை கொள்ளும் படியான ஆடைகளைக் கண்டு என் மனம் சகிக்கவில்லை. பஞ்சாபியரின் சுயமதிப்பைக் குலைத்து, மரியாதையின்றி மாதரின் முகவுரையைக் குச்சியினால் விலக்கி, மிருகங்களைப் போல் ஜனங்களுக்கு விலங்கிட்டு, கவசம் பூண்ட மோட்டார்பீரங்கிகளால் ஜனங்களைக் கொன்ற ஸ்மித் ஒப்ரயின், ஸ்ரீ ராம், மாலீக் முதலியவர்களைக் கண்டும் என் மனம் தாளவில்லை,

## சுதேச பண்டசாலை

மில் துணிகளை விற்பதற்காகப் பண்டசாலை வைப்பின், சுதேசியம் எவ்விதத்திலும் ஓங்காது; ஆனால், அது துணி விலையை உயர்த்த வழியாகும் என்று முன்பே சொல்லி யிருக்கிறேன். கொஞ்சம் முதலைக் கொண்டு, சுத்த சுதேசியத்தை விருத்தி செய்யமுடியும். அதோடு சாமானியமான ஜீவனோபாயமும் அடையலாம். அது எங்ஙனம் என்று கீழே கூறுகிறேன்.

ஒரு கணவன், மனைவி, 10-வயதும் 5-வயதுமுள்ள இரண்டு குழந்தைகள் ஆகிய இவர்களடங்கிய ஒரு குடும்பம் இருக்கிறதென வைத்துக்கொள்வோம். அவர்களிடம் ரூ. 500 முதல் இருக்குமானால், கதர் பண்டசாலை யொன்றுவைத்து நடத்தலாம். 20-ஆயிரம் ஜனங்களுள்ள ஓரிடத்திலே குடியிருப்பதற்கு வேண்டிய அறைகளுடன் மாதம் பத்து ரூபாய்க்கு ஒரு கடையை வாடகைக்கு எடுக்கலாம். தங்களிடமுள்ள சரக்கனைத்தையும் 100-க்கு 10 வீதம் லாபத்துக்கு விற்பின், மாதம் 50ரூபாய் கிடைக்கும். அவர்களுக்கு வேலையாள் இரான். மனைவியும் குழந்தையும் ஒய்வு நேரங்களிலே, அதோடு கணவன் வெளியே போயிருக்கும்பொழுதும், கடையைப் பார்த்துக்கொள்ளலாம். தவிர மனைவியும் குழந்தைகளும் ஒழிந்த வேளைகளில் நூலும் நூற்கலாம்.

ஆரம்பத்தில் கடையிலேயே கதர்வியாபாரம் ஆகாமலிருக்கலாம். அப்போது கணவன் வீடுவீடாகக் கதரை

எடுத்துச்சென்று காட்டி விற்றுப் பிரபலமாக்கவேண்டும். இப்படிச் செய்தால் உடனே வியாபாரம் நடக்கும்.

100-க்கு 10 வீதம் லாபமென்று நான் சொல்லுவதைக்கண்டு ஆச்சரியப்பட வேண்டாம். கதர் பண்டசாலைகள் பரம ஏழைகளுக்கல்ல. கதர் துணியை உபயோகித்தால் பாதிச்செலவு குறைகிறது. தேசாபிமானமே கொண்டு கதர் வாங்குவோர் 100-க்கு 10-வீதம் லாபங்கொடுக்கலாம். தவிர, கதரைப் பிரபலப்படுத்த மிக்க ஜாக்கிரதையும், சிரத்தையும் உழைப்பும் தேவை. கதர் பண்ட சாலையின் சொந்தக்காரன் பெரிய வியாபாரியிடமிருந்து வாங்கான்; நல்ல காதித் துணி வாங்க அவன் அலைய வேண்டும்; ஸ்தலத்திலுள்ள நெசவுக்காரரைக் கண்டு கைநூலால் நூற்கும்படி அவர்களைத் தூண்டவேண்டும். தன்னுடைய ஜில்லாவிலே எல்லா ஸ்திரீகளும் நூல் நூற்கும் வண்ணம் அவன் ஊக்கமூட்ட வேண்டும். பஞ்சைப் பட்டை போடுவோரைக் கண்டுபிடித்து அத்தொழிலில் இறங்கும்படி அவர்களைத் தூண்டவேண்டும். இதற்கெல்லாம் புத்திசாலித்தனம், ஏற்பாடு, மிக்க திறமை முதலியன அவசியமாகும். இவ்வளவு குணங்களைக் காட்டுவோனுக்கு நூற்றுக்கு 10 வீதம் லாபம் கிடைக்க வேண்டியது நியாயமே. இம்முறையில் சுதேச பண்டசாலையை நடத்தின், அவ்விடம் சுதேசிய இயக்கம் பரவும் நல்ல ஸ்தலமாகும். ஏற்கனவே சுதேச பண்டசாலை வைத்திருப்போர் மேற்

சொல்லிய விஷயங்களைக் கவனிப்பார்களாக. உடனே தங்கள் வழியைத் தலைகீழாய்த் திருப்பிவிடாமற்போனு லும், எவ்வளவுக் கெவ்வளவு கதர் விற்கின்றனரோ அவ்வளவுக் கவ்வளவு சுதேசியத்தை அவர்கள் ஓங்கச் செய்வர்.

## 7. செல்வ விஷயம்

சீமைத் துணி வியாபாரத்தைப் பற்றி மிஸ்டர் ஏ. சி. கௌபரோ என்பவர் ஒரு துண்டுப் பிரசுரம் எழுதி யிருக்கிறார். அது இந்தியா கவர்ன்மெண்டின் உத் தரவின் மேல் பிரசுரமாயிருக்கிறது. ஒரு நண்பர் மூலம் அதை நான் பார்க்கலானேன். அதன் முன் னுரையில் பின் வரும் வாக்கியம் காணப்படுகிறது. "இத்துண்டுப் பிரசுரத்தில் காணப்படும் விஷயங்களும் கருத்துக்களும் ஆசிரியருடையன என்பதை அனைவரும் கவனிப்பரென்று இந்தியா கவர்ன்மெண்டார் விரும்பு கின்றனர்" அப்படியானல் வரிப்பணத்திலிருந்து செலவுசெய்து இத்தகைய துண்டுப் பிரசுரங்களை ஏன் வெளியிடவேண்டும்? நான் பார்வையிட்டது 16-வது பிரசுரம். இருகட்சியின் அபிப்பிராயங்களையும் இந்தியா கவர்ன்மெண்டார் வெளியிடுவரா?

சுதேசிய இயக்கத்துக்கு மறுப்பாக அப்பிரசுரம் வெளியாயிருக்கிறது. இறக்குமதி யாகும் சரக்குக

ளென்ன, கையால் நெய்யப்படும் துணிகள் உள்பட இந்தியாவில் தயாராகும் துணிகளென்ன, இவைகளின் நிலையைப் பற்றி விரிவான குறிப்புகள் அப்பிரசுரத்தில் உள. ஆயினும், சுதேசிய இயக்கத்தை உணர்ந்து கொள்வதற்கு அந்தப்பிரசுரம் பயன்படாது. மிகவும் சிரமப்பட்டு அப்பிரசுரத்தை எழுதிய ஆசிரியர் தேசிய இயக்கத்தையோ அதன் பலனையோ அறிந்து கொள்ள முயலவேயில்லை. மகத்தான நிர்மாண முயற்சியாகிய சுதேசிய இயக்கத்தைக் கண்டு இந்தியா கவர்ன்மெண்டார் வெறுப்பதும், சுதேசிய இயக்கத்தை அபிமானத்துடன் உணர்ந்துகொள்ள முயலாமல் மறுக்கப் பார்க்கின்றன ரென்பதுமே கவர்ன்மெண்டின் போக்கிற்குத் தக்க கண்டனமாகும்.

துண்டுப் பிரசுர ஆசிரியன் வாதம் என்னவென்றால்,

(1) சுதேசிய இயக்கம் பலன் தருமாயின், இந்தியாவின் நெசவுத் தொழிலுக்கு ஒரு பாதுகாப்பா யிராமல் தடையாயிருக்கும்

(2) இயக்கத்தினால் இந்திய முதலாளிகள் தனவந்தர்களாவார்கள்; துணியை வாங்குவோரோ நஷ்டத்திற்கு ஆளாகித் தண்டனையடைவது போலாவர்.

(3) இறக்குமதியாகும் ஜவுளிகளைப் போன்ற துணிகள் இந்தியாவில் ஏராளமாக நெய்யப்படாததால், இறக்குமதி ஜவுளிகளால் போட்டி ஏற்படாது.

(4) அத்தகைய ஜவுளிகளை விலக்குவதனால், விலை மிக உயருமே யன்றி ஏற்ற பலன் கிட்டாது.

(5) தேவைக்கு ஏற்ற உற்பத்தி இல்லாமற் போகவே, பஹிஷ்காரத்தால் கஷ்டப்படுவோர் துணி கட்டுவோரே யாவர்.

(6) கைநூல் உற்பத்தி அழிந்துபோனதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். அதற்குக் காரணம் என்னவென்றால், குறுகிய காலத்தில் அதிகவேலை செய்யும்படியான யந்திர சாதனங்கள் கண்டு பிடிக்கப்பட்டதாகும். இது இயற்கையான காரணம்; இதைத் தடுக்க இயலுமோ ?

(7) இந்தியாவிலே ஆதியில் பருத்திச் சாகுபடி திறமையாக இருந்தது. அச்சாகுபடியை இந்திய விவசாயி கவனியாமல் அசட்டையாக இருந்து விட்டான். ஆதலின், அவன் தனக்குத்தானே அழிவு தேடிக் கொண்டவனானான்.

(8) ஆதலின் பருத்திச் சாகுபடியை விவசாயிகள் திறமையாக நடத்த வேண்டுமென்பது என் யோசனை.

(9) உபயோகமற்ற சரக்குக்களை வீடெங்கும் நிறப்ப முயலாமல், பருத்தி சாகுபடியை நன்குசெய்யும்படி முயலுமிடத்து தற்காலத்திற்கு மட்டுமேயல்லாமல், பல தலை முறைக்கும் பயன்தரும்.

மேற் காட்டிய விஷயங்களிலிருந்து புலப்படுவதென்ன ? செல்வ நிலையில், இந்தியா கதிமோட்சம் அடையக் கைராட்டினம் பரம அவசியமென்று நான்

கருதுகையில், துண்டுப்பிரசுர ஆசிரியரோ அது பரம முட்டாள்தன மென்கிறார். முன்னுரையில் என்ன சொல்லியிருப்பினும் சரி, முட்டாள்தன மென்பதே கவர்ன்மெண்டின் கருத்தாகும். சுதேசிய இயக்கத்திலாவது ஜனங்களுடன் கலந்துகொண்டு உழையுங்களென்று கவர்ன்மெண்டையும், ஒத்துழைப்போரையும் நான் அழைத்துளேன். கைராட்டினத்தில் ராஜீய விஷயப் பலனும் கிட்டுமென்பதை அவர்கள் நம்பாததால், அதில் ராஜீய சம்பந்தமிருப்பதை அவர்கள் கவனிக்கவேண்டியதில்லை. தாங்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக, கைராட்டினத்தால் ஜனங்களின் ராஜீய சக்தி வளருமேயானால், அதைப்பற்றி அவர்கள் வருந்தவேண்டியது மில்லை. கதர்த்துணியோடு மல்யுத்தத்திற்கு நில்லாமல், அதைப் பிரபலப்படுத்த அவர்கள் முயலும் பக்ஷத்தில், இந்திய விவசாயி நஷ்டமடையவும், அன்னிய வியாபாரி பலனடையவும் கவர்ன்மெண்டார் முயலுகின்றனரென்று ஜனங்களுக்குள்ள மகத்தான சந்தேகத்தையும் போக்கலாம். எப்பொழுது வேண்டுமானாலும் சரி, அவர்கள் வந்து இச்சுதேசிய இயக்கத்தில்கலந்துகொண்டு உழைக்கலாம். ஒத்துழையாமைத் திட்டத்திலுள்ள இதர அம்சங்கள் எப்படி முடியினும், சுதேசியம் எப்பொழுதும் நீடித்திருக்கும்; நீடித்திருந்தால்தான் இந்தியாவின் வறுமைப் பிணி தொலையும்.

நான் அர்த்த சாஸ்திர நிபுணனல்லன். அர்த்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள கோட்பாடு வேத

வாக்கு அல்ல; அது தெய்வ வாக்குமல்லவென்று திடமாய்க் கூறுவேன். இங்கிலாந்தின் அர்த்த சாஸ்திரம் ஜெர்மனியின் அர்த்த சாஸ்திரத்திற்கு மாறுபட்டதாகும். பீட் கிழங்கிலிருந்து உண்டாகும் சர்க்கரைக்குத் தக்க உதவி புரிந்து, சர்க்கரை வியாபாரத்தைப் பிரபலமாக்கி, ஜெர்மனி பணக்கார தேசமாயிற்று. அன்னிய தேசங்களிலே ஏகபோகமாக வியாபாரத்தை நடத்தி இங்கிலாந்து தேசம் செல்வம் படைத்தது. ஒரு தேசத்தினரின் அர்த்த சாஸ்திரமானது, அத்தேசத்தின் சீதோஷ்ண பூததத்துவ நிலைமைகளைச் சார்ந்ததாகும். இத்துறையிலே இந்தியா தேசத்தின் நிலைமை இங்கிலாந்தின் நிலைமையை விட முற்றிலும் மாறுபட்டது. இங்கிலாந்துக்கு இறைச்சி யாகாரமாயிருப்பதானது இந்தியாவுக்கு விஷம் போலாகும். இங்கிலாந்தின் வட கோடியிலுள்ளோருக்கு மிக்க உணர்ச்சியைத் தரும் சாராயம் அத்யாவசியமாயிருக்கலாம். ஆனால், அது ஓர் இந்தியனை வேலைக்கு யோக்கியமில்லாமலும், சமூகத்தில் வாழத் தகுதியில்லாமலும் செய்துவிடும். ஸ்காட்லாந்தில் உள்ளவர்கள் கட்டாயம் கம்பளிச் சட்டை போட்டுக்கொள்ள வேண்டிய அவசியம் இருக்கும் ஆனால் இந்தியருக்கோ அது ஒரு தலைச் சுமையாகும். தொழிலில் மிகப் பெருத்தும், நகரங்களையே மிகுதியாக வுடையதும், இதர தேச ஜனங்களை வருத்திச் சாப்பிடத் தயங்காத ஜனங்களைக்கொண்டதும், இயற்கைக்கு விரோதமாக நடக்கும் அபரிமித

மான வியாபாரத்தைக் காக்கப் பெரிய கப்பற்படை யுடையதுமானத் தேசத்திற்கு யதேச்சையான வியா பாரம் அர்த்த சாஸ்திரப்படி மிக்க தகுதியுள்ளதா யிருக் கலாம். ஆனால், இந்தியாவுக்கோ யதேச்சையான வியா பாரம் ஒரு சாபத் தீயாகி இந்தியரை அடிமைப்படுத்தி விட்டது.

இனி மிஸ்டர் கௌப்ரோவின் கண்டனம் ஒவ் வொன்றுக்கும் வரிசைக் கிரமமாக விடை சொல்வோம்.

(1) சுதேசிய இயக்கமானது வலுவிலேயே வியா பாரப் பாதுகாப்பைப்போல் பயன் தரும்.

(2) முதலாளிக்கு மிக்க பலன் கிடைக்கும்படி யாகவோ, துணி கட்டுவோருக்குக் கேடு உண்டாகும் படியாகவோ, அந்த இயக்கம் உருப்படுத்தப் படவில்லை. இச்சொற்ப காலத்திற்குள்ளே இந்தியத் துணிக ளின் விலை ஏறி யிருக்கலாம். ஆனால் விலை யேற்றம் நீடித்திராது. ஏனெனில் துணி கட்டுவோரில் பலரும் தங்களுக்கு வேண்டிய துணியைத் தாங்களே நெய்து கொள்வோராக ஆய்விடுவர். கிளப்பு காப்பாட்டைவிட வீட்டுச் சாப்பாடு அதிக செலவுள்ள தாகுமோ? வீட் டுச் சாப்பாட்டை விடுத்து, கிளப்பு சாப்பாட்டை மேற் கொள்ள முடியுமோ? முடியாது; குடிசைத் தொழி லாகிய நூல் நூற்றலும் நெசவும் அதிகச் செலவுக்கு இடமாகா. 25-கோடிக்கு மேற்பட்ட ஜனங்கள் தங்க ளுக்கு வேண்டிய நூலைத் தாங்களே தயாரித்துக்கொண்டு அக்கம் பக்கத்திலுள்ள இடங்களில் அந்நூலை நெய்து

துணியாக்கி விடுவர். அந்த 25 கோடி ஜனங்களும் விவசாயிகள்; வருஷத்திலே நான்கு மாதம் வேலையின்றிச் சோம்பியிருக்க வேண்டியவர்கள். வேலையின்றி யிருக்கும் நேரத்தில், அவர்கள் நூல் நூற்று அதை நெய்யச் சொல்லித் தரிப்பாராயின், கதர்த் துணியுடன் எந்த மில் துணியும் போட்டிபோட முடியாது. அவ்விதம் நெய்யப்பட்ட துணி மிகவும் மலிவாயிருக்கும். 25 கோடி ஜனங்கள் போக பாக்கியுள்ளோர் அத்தொழிலில் இறங்காமற் போயின், 25 கோடி ஜனங்களுக்குக் கண்டு மிஞ்சும் துணி போதும்.

(3) சீமையிலிருந்து இறக்குமதியாகும் ஜவுளிகளில் பெரும்பாலனவை போன்ற துணிகள், இந்திய மில்லுகளில் நெய்யப்படவில்லை யென்பது உண்மையே; ஆனால் என்னுடைய முக்கிய நோக்கம் யாதெனில், அன்னிய நாடுகளுடன் அத்துணி விஷயத்தில் வியாபாரப் போராட்டம் புரியவேண்டு மென்பதன்று. ஜனங்கள் சோம்பிக் கிடக்கும் நேரத்தில் அவர்களுக்கு ஒரு தொழிலைக் காட்டி அவர்களுடைய வறுமைப் பிணியைப் போக்கவேண்டு மென்பதே என் நோக்கம்.

(4) பகிஷ்காரம் முடிவில் விலையேற்றத்தைத் தராதென முன்பே சொல்லியுள்ளேன்.

(5) தேவைக்கு ஏற்ற உற்பத்தி என்ற கோட்பாடுக்கு விரோதமாக விலக்கு ஏற்படவில்லை. ஏனெனில் தேவைக்கு ஏற்றவளவு உற்பத்தி செய்யும் மார்க்கம், தேடப்பட்டுள்ளது. நேர்த்தியும் பலவகை வர்ணமும்

பொருந்திய துணிகளில் பிரமை கொள்வோரின் போக்கைத் திருப்புவது இயக்கத்தின் நோக்கம்.

(6) ஆதிகால ஆங்கில வியாபாரக் கூட்டத்தாரின் பிரதிநிதிகளால் கைநூல் தொழில் மிருகத்தனமாய் அழிக்கப்பட்டுப் போயிற்றென்பது பிரசித்தம். கைநூல் தொழிலை வரன் முறையாகக் கொடுமை காட்டிக் குலைத்திராமற் போனால், எவ்வளவு அதிகமான யந்திர சாதனமும் அத்தேசியக் கலையையும் தொழிலையும் குலைத்திருக்க முடியாது.

(7) பருத்திச் சாகுபடியின் திறமை குறைவுபட்டதற்கு இந்திய விவசாயி பாத்திரமல்லன். கைநூல் தொழில் நசுக்கப்பட்டுப் போனவுடனே, பருத்திச் சாகுபடியில் ஊக்கம் போய்விட்டது. விவசாயிகளைப் பற்றி அரசாங்கம் ஒரு நாளும் கவலைப் பட்டதில்லை.

(8) என்னுடைய உழைப்பின் பலனாக, பருத்திச் சாகுபடியை விருத்தி செய்வதில் விவசாயிகளுக்குக் கவனம் உண்டாயிருக்கிறது. பருத்திச் சாகுபடியின் திறமையே இந்தியாவின் வறுமைப் பிணியைத் தீர்த்து விட முடியாது. ஏனெனில், வருஷத்திலே நான்கு மாதம் வேலையின்றிச் சோம்பிக் கிடப்பதற்குப் பரிகாரம் வேறு எப்படி உண்டாகும் ?

(8) ஆதலின் கைராட்டினத்தினால், செல்வ நிலைமையின் சீர்கேடு இயற்கையாக சுலபமாய்ச் செலவின்றித் தீர்ந்துவிடும். ஆசிரியர் அறியாமற் சொல்வது போல் கைராட்டினம் உபயோக மற்றதன்று. அது ஒவ்வொரு

வீட்டிற்கும் இன்றியமையாத பிரயோஜன முள்ள பண்டமாகும். தேசிய க்ஷேமலாபத்திற்கும், ஆதலின்சுதந் திரத்திற்கும் அதுவே அடையாளம்; அது வியாபாரப் போராட்டத்திற்கான கருவியன்று; வியாபார சமாதா னத்திற்கு ஏற்ற கருவி, உலகிலுள்ள ஜனங்களிடம் விரோத எண்ணங் கொள்வதற் கில்லாமல், நல்லெண் ணத்திற்கும், 'தன் கையே தனக்குதவி' யென்பதற்கும் அடையாளமாகும். உலகின் பலனை ஏகபோகமாய் அனுபவித்து, உலக சமாதானத்துக்கு இடையூறா யிருக் கும் கப்பற்படையின் உதவி கைராட்டினத்திற்குத் தேவையில்லை. ஆனால் தங்களுக்கு வேண்டிய உண வைத் தாங்களே தங்கள் வீடுகளில் சமைத்துக் கொள் வது போல், தங்கள் ஆடைக்கு வேண்டிய நூலைத் தாங்களே தயாரித்துக் கொள்ளவேண்டுமென்ற தீர்க்க திடம் லக்ஷக் கணக்கான ஜனங்களுக்கு இருக்கவேண் டும். வேறு பல துறைகளிலே செய்திருக்கக் கூடிய பழிக்காக எனக்குச் சாபங் கிடைத்தாலும், கிடைக்க லாம். ஆனால், கைராட்டினத்தை மீண்டும் பிரபலப் படுத்தியதற்காக எனக்குப் புகழே கிடைக்குமென நம்பி யுள்ளேன். எவ்வளவுக்கெவ்வளவு கைராட்டினம் சுழலு கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு சமாதானமும் நல் லெண்ணமும் அன்பும் பெருகும். மேலும், கைராட்டி னத்தைக் கைவிட்டதால், இந்தியாவுக்கு அடிமைத்த னம் வந்தது. எனவே மீண்டும் அதைக் கையாளுவதால் இந்தியாவின் சுதந்திரம் கைகூடும்.

## 8 விலக்கஞ் செய்வதெப்படி?

அன்னிய ஆடைகளை விலக்கல் ஒரு தண்டனை யான ஏற்பாடன்று. உயிருக்கு மூச்சு எப்படி அவசியமோ அப்படியே நம் தேசிய வாழ்வுக்கு அன்னிய ஆடை விலக்கு அவசியமாகும். பகிஷ்காரத்தைச் சீக்கிரம் நாம் நிறைவேற்றினுல் தேசத்துக்கு மிகவும் நலமா யிருக்கும். பகிஷ்காரமின்றி சுயராஜ்யத்தை ஏற்படுத்த முடியாது ; ஏற்படுத்தியபின் நிலை நாட்டவும் இயலாது; ஆதலின் சீக்கிரம் பகிஷ்காரத்தை நிறைவேற்றுவ தெப்படி ?

(1) யந்திர சாலைச் சொந்தக்காரர் தங்கள் லாபத்தை ஒழுங்குபடுத்திக்கொண்டு, இந்தியருக்கு வேண்டிய துணிகளையே தயாரிக்கவேண்டும். (2) அன்னிய ஆடைகளை யாரும் இறக்குமதி செய்யக்கூடாது ; (3) அன்னிய ஆடையை வாங்காமல் மறுத்து, கூடுமான வரையில் காதி வஸ்திரத்தையே வாங்கவேண்டும் (4) காதி வஸ்திரத்தையே கட்டிக்கொண்டு, சுதேசித் துணிக்கும் பரதேசித் துணிக்கும் வேற்றுமை தெரியாத ஏழைகளுக்கு மில் துணி கிடைக்கும்படி செய்யவேண்டும். (5) சுயராஜ்யம் கிட்டும் வரையிலும், வேண்டுமளவு காதித் துணி கிடைக்கும் வரையிலும், உடலை மூடிக் கொள்வதற்குப் போதுமான கதர் ஆடையுடன் திருப்தி யடையவேண்டும். (6) மதுபானஞ் செய்வதில்லை யென்று விரதங்கொண்டபின்பு, சாராயத்தை நாசஞ் செய்து விடுவது போல், பரதேசித்துணியைத் தொலைத்

துவிடவேண்டும்; அல்லது வெளிதேசங்களில் உப யோகமாகும்படி அனுப்பிவிடவேண்டும். அசுத்தமான வேலைகளுக்குக் கையாண்டு, பரதேசித் துணிகளைப் போக்கிவிடவேண்டும்.

மேற்சொல்லப்பட்டபடி அனைவரும் ஏககாலத்தில் நடப்பார்களாக. முடிவிலோவென்றால், துணி கட்டிக் கொள்பவரின் தீர்மானத்தையே பகிஷ்காரம் சார்ந்தி ருக்கிறது. அடிமைத்தனத்துக்கு அடையாளமான பரதேச ஆடையைத் தரிக்கக்கூடவேகூடாது.

கதர் ஆடை தரிப்போரில் பலர் அகமும் அலட்சிய மும் காட்டி மோசமாய் நடக்கின்றனரென்று ஒரு நண் பர் எனக்கு அறிவித்திருக்கிறார். அத்தகையோரிடம் ஒத்துழையாமை உணர்ச்சியேனும், உண்மை யுணர்ச்சி யேனும், இல்லையென்றும் அவர் கூறுகிறார். தங்க ளுடைய மோசத்தை மறைக்கவே அவர்கள் கதர் ஆடை உடுக்கிறார்களாம். ஆயினும் இவ்வாறு சிலர் நடப்பத னால், கதர் ஆடையைத் தரிக்ககூடாதென்பதென வாதஞ் செய்யக்கூடாது. தேசத்தின் சீர்கேடான நிலை சீர்படு வதற்குக் கதர் ஆடை அவசியமென்பதே கவனிக்க வேண்டிய விஷயம். இந்த அவசியத்தை ஒரு போக்கிலி யும் உணர்ந்துகொள்ளலாம். ஆதலின் அந்த ஆடையை உடுத்திக்கொள்ள அவனுக்கு உரிமையுண்டு. கவர்ன் மெண்டின் துப்பாள் ஒருவன் ஜனங்களை ஏமாற்றக் கதர் உடை தரிப்பின், அதனால் தேசத்திற்கு ஓரளவு செல்வப்பயன் கிடைத்ததென்று மகிழ்வேன். அதற்கு

மேல் அவனை நான் பாராட்டமாட்டேன். தவிர அவனிடம் பக்தியோ வேறு சிறந்த குணமோ இருப்பதாகக் கருதேன்.

கவர்ன்மெண்டுடன் ஒத்துழைப்போரும் சரி, கவர்ன்மெண்டூழியருஞ் சரி,ஒத்துழையாமைக் காரரென்ற தப்பெண்ணத்திற்கு ஆளாகாமலேயே கதர் ஆடை தரிக்கலாம். சாமானியரை வஞ்சிக்கவேண்டி அயோக்கியரும் கோவிலுக்கு வருகின்றனரென்று ஒரு பக்தன் கோவிலுக்குப் போகாமல் இருந்துவிட முடியுமா? அங்ஙனமே அயோக்கியரும் கதர் கட்டுகின்றனரென்று யோக்கியர் கட்டாமலிருப்பதா. பார்லிமெண்டு மெம்பரொருவர் தன்னிடமிருந்த பலகுணக்கேடுகளை மறைக்கக் கருதித் தாம் மது விலக்குவாதியென நடித்துவந்ததை நானறிவேன்; தவிர நடையும் நெறியுமில்லாத ஒருவன் மது விலக்குவாதியாகிப் பெரிய மனிதர்களுடன் தாராளமாய்ப் பழகிவந்ததும் எனக்குத்தெரியும். வேஷமும் சன்மார்க்கத்திற்கு ஒரு வழியாகுமென்று ஒரு கவி சொல்லியிருக்கிறார்.

## கைராட்டினத்தின் கானம்

இந்தியாவின் மிக்க புராதன யந்திரமான கைராட்டினத்தின் கானம் மீண்டும் மனித சமூகமெங்கும் பரவி வருகிறது. இந்தியாவின் ராணிகளும், மகா ராணி

களும் தேச நன்மைக்காக நூல் நூற்கவும், ராணுக்களும் மகாராணுக்களும் கைத்தறியருகே வீற்றிருந்து தேசத்திற்காக ஆடை நெய்யவும், முன்வரும் வரையில் வாளா விருக்கப்போவதில்லை யென பண்டிதமாளவியா சொல்லியிருக்கிறார்.

அவுரங்கஜீப் தனக்கு வேண்டிய குல்லாய்களைத் தானே தைத்ததுண்டென்பதை அவர்கள் கவனிப்பாராக இன்னும் பெரிய சக்கரவர்த்தியான கபீர் நெசவுகாரர். தமது கவிகளிலே நெய் தொழிலை சிலாகித்துச் சொல்லியிருக்கிறார். சைத்தானுடைய வலையிலே அகப்படு முன், ஐரோப்பிய ராணிகள் நூல்நூற்று வந்தனர். அதை ஒரு கௌரவமான தொழிலாகவும் கருதி யிருந்தனர்.

ஆதலின் இப்புண்ணிய தேசத்தின் புராதனத் தொழிலை மீண்டும் மேற்கொள்ளும் வண்ணம் இந்திய ராஜவம்சத்தினரை நம் பண்டிதர் தூண்டுவது நியாயமே. வாளோடு வாள் உரசுவதனால், இந்தியாவில் சுகவாழ்வும் சுதந்திரமும் மறுபடி உதிக்கமாட்டா. கைராட்டினத்தின் கானம் ஒவ்வொரு வீட்டிலும், முன்போல் மீண்டும் கேட்குமாயின், சுகவாழ்வும், சுதந்திரமும் சித்தியாகும். கைராட்டினத்தின் கானம் மிக்க ரஸமாயிருக்கும். ஆர்மோனியம் முதலியவைகளைவிட மிக்க பலன் தரத்தக்கதாகவும் இருக்கும்.

கைராட்டினத்தைமேற்கொள்ளும்வண்ணம் இந்திய ராஜ வம்சத்தினரை பண்டிதர் தமக்குரிய வழியில் ஒருபுரம் முயல, உயர் குடும்பத்திலுதித்த ஸ்ரீமதி ஸாராளா

தேவி அத்தொழிலைக் கற்றுக்கொண்டு, சுதேசி இயக்கத்திலே மனமும் மெய்யுங் கலந்து உழைத்துவருகிறார். சுதேசியத்திலேயே அவர் ஆழ்ந்து விட்டார். ரவை சல்லாவினுலான அழகுப்புடவையைத் தரிக்க அவருக்கு விருப்பமில்லை. கோடை காலத்திலும் கதர் புடவையுடன் இருப்பதில் அவருக்குத் திருப்தியுண்டாய் விட்டது. கதர் உடுத்தவேண்டு மென்று அவர் வாயினுல் சொல்வதைக் காட்டிலும், அவருடைய கதர் புடவையே பலமாக வற்புறுத்துகிறது. அமிருதஸரஸ், லாஹூர் முதலிய இடங்களிலே மகாநாடுகள் கூட்டிப்பேசி, இரத்தின சுந்தரின் மனைவி யென்ன, புக்க சௌத்ரியென்ன (யாரும் வெளியே வரக் கூடாதென்று ஜெனரல் டையர் ஆக்ஞையிட்டிருந்தும், ஏப்ரல் 13வ யன்று இரவிலே பல நூறுக்கணக்கான சவங்களின் நடுவே தன்கணவனது சரீரத்தைத் தன் மடியில் தாங்கிக் கொண்டிருந்த) இரத்தின தேவி யென்ன, ஆகிய இவர்களையும் சுதேசிய இயக்கத்தில் உழைக்கும் வண்ணம் ஸ்ரீமதி சாரளா தேவி செய்து விட்டார். இந்த ஸ்திரீ ரத்னங்களை நாம் பாராட்ட வேண்டும். கைராட்டின கானத்தைக் கண்டும், தேசீய ஊழியம் புரிகிறோமென்பதைக் கொண்டும், அவர்களுடைய மனம் குளிருமாக. இனி அமிருதஸரஸ் நகரிலுள்ள இதர ஸ்திரீகளும் ஸ்ரீமதி சாரளா தேவிக்குப் பக்கபலமாய் நிற்பார்களாக. ஆண்மக்களும் அவ்விஷயத்தில் தங்கள் கடமையைச் செலுத்துவார்களாக,

பம்பாயிலே உயர் குடும்ப ஸ்திரீகள் கைராட்டினத்தில் நூல் நூற்க முன்பே தொடங்கிவிட்டனர். மானகபாய் பகதூர்ஜியின் மனைவியும் நூற்க ஆரம்பித்து விட்டார். பெண்களின் சங்கமாகிய சேவசாதனத்தில் அத்தொழிலைப் பரப்பி விடவும் முயன்று வருகிறார். ஜாஞ்சிரா பீகம் ராணியும் அவருடைய சகோதரி (அதியாபிகம் ரஹிமானின்) மனைவியும் அத்தொழிலைக் கற்றுக்கொள்ளத் தொடங்கி விட்டனர். இந்த ஸ்திரீகள் இனிமேல் தினந்தோறும் மதக்கடமை போல் நூல் நூற்றுவருவரென நினைக்கிறேன்.

மகத்தான இவ்வித்தையை உயிர்ப்பிக்க நான் முயலுவதைக் கண்டு சிரிக்கக்கூடிய நண்பர் இருக்கின்றனர். மல்லுகளும், தைக்கும் யந்திரங்களும் நிரம்பிக் கிடக்கும் இக்காலத்திலே பழைய கைராட்டினத்தைப் பரப்பிப் பலனடையப் பாடுபடுவோன் பித்தனே யென்றும், அவர்கள் நினைப்பர். தைக்கும் யந்திரம் வந்து விட்ட போதிலும், கையில் ஊசிகொண்டு தைப்பது நின்று விடவில்லை. டைப்படிக்கும் யந்திரம் வந்து விட்ட போதிலும் கையின் சாமார்த்தியம் போய்விட வில்லை. சோற்றுக் கடைகள் இருப்பினும் வீடுகளிலேயே சமையல் நடப்பது போல், நூல் நூற்கும் யந்திரம் இருப்பினும் கைராட்டினம் ஏன் இராது? தைக்கும் யந்திரங்களும், டைப்படிக்கும் யந்திரங்களும் போய்விடலாம். ஆனால் ஊசியும், இறகுபேனாவும், காணல் கட்டைப்பேனாவும் நிலைத்திருக்கும். மில்கள் அழிந்து விடலாம்; கைராட்

டினமோ தேசிய நலத்துக்கு அவசியமாகும். ஏழைக் குடும்பங்கள் கைராட்டினத்தினல் கொஞ்சம் அதிகமான வரும்படி யடைவதையும், கைராட்டினத்தினல் வீடுகளில் மக்களின் மனம் குளிர்ந்திருப்பதையும் பார்த்தறிந்தால், சந்தேக ஆசாமிகளின் மயக்கந்தீரும்.

அதிகமாக நூல்நூற்று இன்னும் கொஞ்சம் அதிக ஊதியம் கிடைக்கும் வண்ணம், புது மாதிரியான கைராட்டினம் கண்டு பிடிப்பின், தக்க பரிசு தருவதாக ஸ்ரீமான் ரேமசங்கர ஜவஜீவன் சொல்லியிருக்கிறார். புதுமாதிரியான ராட்டினம் சீக்கிரம் வந்து விடுமென நினைக்கிறேன். தக்ஷிண தேச சிற்பியொருவர் ஆச்சரியமாகக் கண்டு பிடிக்க முயன்று வருகிறார். அது மலிவாகவும், இலகுவில் ஓட்டக்கூடியதாகவும் இருக்கும். சாதாரண ராட்டினத்தைவிட அதில் அதிக நூல் நூற்கலாம். 5 வயதுள்ள குழந்தையும் அதில் சுலபமாய் வேலை செய்யலாம். இவ்வளவு பலனும் தருவதாக அந்த ராட்டினம் இருப்பினும் சரி, கை நூல் தொழிலும் கை நெசவும் முன் போல் பிரபலமாயின், இந்தியாவின் செல்வ நிலைமை உயர்ந்து சன்மார்க்க கதிமோக்ஷம் கிட்டுமென்பது திண்ணம். விவசாயத்துடன் இன்னும் கொஞ்சம் உணவளிக்கும் இலகுவான ஜீவனோபாயத் துணைத்தொழிலும் லக்ஷோப லக்ஷக்கணக்கான ஜனங்களும் மிக அவசியம். பல்லாண்டுகளுக்கு முன், ஒவ்வொரு வீட்டிலும் நூல் நூற்றல் குடிசைத்தொழிலாயிருந்தது, பசிப்பிணியிலிருந்து லக்ஷோப லக்ஷக்

கணக்கான ஜனங்களைக்காக்க வேண்டுமாயின், அவர்களுடைய வீடுகளிலே மீண்டும் நூல் நூற்கும் தொழில் நடக்க வேண்டும்; ஒவ்வொரு கிராமத்திற்கும் நெசவுகாரன் இருந்து தீரவேண்டும்.

## கைத்தறியும் யந்திரசாலையும்

கை நூலைக்கொண்டு கைத்தறியில் தயாரான ஆடைகளையே அணியவேண்டுமென்று இப்போது போலவே முயலும் பொழுதெல்லாம் சரி, யந்திரங்களின் உதவியைக்கொண்டு அமோகமாக வேலை நடந்துவர, பழைய காலத்திலுள்ள கைத்தறியை நிலை நாட்டிவிட உத்தேசமா என்று பலரும் திகைக்கின்றனர். ஒரு மனிதனுடைய கைசக்தி பெரியதா, பற்பலவகைகளால் ஓடும் யந்திரசக்தி பெரியதா என்பது கேள்வியாகிறது, "ஜன்மபூமி" என்ற பத்திரிகையிலே ஒருநிருபர் இந்த சாமானிய பிழைக்கு ஆளாகும்படி ஐயப்படுகிறார். அவர் பிரமையுடன் சொல்லுவதாவது:—
"நாம் மட்டு மன்று, எல்லா தேசத்தினரும் சரி, கவனிக்க வேண்டிய விஷயம் யாதெனில், யந்திரங்களின் முன்னே கைத்தறி நிற்கமுடியுமா முடியாதா? அல்லது கைத்தறியினால் லக்ஷோப லக்ஷம் குடும்பங்களுக்கு அன்னம் கிடைக்குமா? அல்லது இன்னும் அதிகமான பல லட்சோப லக்ஷக்கணக்கான ஜனங்

களுக்கு வேண்டிய ஆடையைக் கைத்தறியினல் நெய்து சாதித்துவிட முடியுமா? என்பதாகும். ஒரு தேசத்தினருக்கு ராஜ்ய சக்தியையும் பொருள் சக்தியையும் அளிக்கவல்லது எது? கைத்தறியா? யந்திரங்களா? இது தான் முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டிய விஷயமாகும்.

இவ்வாறு அங்கிருபர் சொல்லியிருப்பதைப் பார்த்தால், இத்தேசத்தினரின் ராஜ்ய சக்தியையும், பொருள் வன்மையையும் பற்றி அவர் என்ன கருதியிருக்கிருரென்று நமக்கு நன்கு புலப்படவில்லை. அரைவயிறே யுண்டும், பாதியளவு தேகம் நிர்வாணமாயு முள்ள நமது தேச ஆண் பெண் குழந்தைகளுக்கு அன்னமும் ஆடையுமின்றி அச்சக்தி வந்து விடுமென்று அங்கிருபர் கருதுகிருரா என்ன? இயந்திரங்களினல் பிரமாதமாக வேலை நடக்கும் இக்காலத்திலும், ஒரு தேசத்தின் ராஜ்ய சக்தியும் பொருள் வன்மையும் சக்திவாய்ந்த இயந்திரங்களைப் பொறுத்திருக்கவில்லை; ஜனங்களின் சக்தியையே பொறுத்திருக்கின்றன. ஜெர்மனி மிகச்சிறந்த சக்திவாய்ந்த தற்கால இயந்திர சாதனங்களை ஏராளமாக அடைந்திருந்தது. ஆயினும் முடிவிலே ஜனங்களின் சக்தி குன்ற, ஜெர்மனி காரியத்தை சாதிக்கத் தவறிப்போய்விட்டது. நம் தேசஜனங்களின் சக்தியை உருப்படுத்தவே நாம் விரும்புகிறோம். இதற்காக உற்பத்திக்கான சிறந்த வழியைப் பின்பற்றினல் பட்டும் பயன் படாது; உற்பத்தி வினியோகம் ஆகிய இரண்டும் சரிவர நடப்பதற்கான சிறந்த

வழியைத் தேடவேண்டும். தற்சமயம் துணி நெசவை மிகவும் அதிகமாகப் பரப்ப இரண்டுவழிகள் உள. அவை யாவன:—(1) இன்னும் புதிய இயந்திரசாலைகளை யமைத்தல்; அதனுடன் ஒவ்வொரு ஆலையிலிருந்தும் அதிகத் துணி கிடைக்கும்படி செய்தல். (2) கைத்தறிகளின் தொகையைப் பெருக்கி அபிவிருத்தி செய்தல்; இந்த முயற்சிகளை யெல்லாம் ஒருங்கே நடத்தலாம். கைத்தறிக்கும் இயந்திரத்திற்கும் போட்டி யென்பது முற்றிலும் பிசகாகுமென ராதாகமல முகர்ஜீ யென்பவர் தமது 'இந்திய அர்த்த சாஸ்திர அடிப்படை' என்ற நூலில் கூறியிருக்கிறார். இன்னும் அவர் சொல்லி யிருப்பதாவது:—

கைத்தறியானது இயந்திரங்களுடன் போட்டிபோடுவதாகவில்லை. இயந்திரங்களிலிருந்தும் தேவைக்கு ஏற்ற வளவு துணி கிடைக்காதிருக்கும் குறையை அது நிவர்த்திக்கும். எப்படியெனில்:—

(1) ஆலையில் நெய்ய முடியாத பிரத்தியேகமான துணிகளைக் கைத்தறியைக் கொண்டு தான் நெய்யமுடியும்.

(2) தற்சமயம் ஆலையில் கையாளப்பட முடியாத சில நம்பர் நூல்களைக் கொண்டு நெய்யக் கைத்தறிதான் வேண்டும்.

(3) இந்தியாவில் நூல்நூற்கும் ஆலைகளிலிருந்து வெளியாகும் நூல்கள் இத்தேசத்திற்குக் கண்டு மிஞ்சி

வேறிடங்களுக்குப் போவதால், மிஞ்சியவைகளை வேறிடங்களுக்கு அனுப்பாமல் கைத்தறியில் நெய்யலாம்.

(4) கைத்தறி நெசவு கிராமத் தொழிலாதலால் கிராமங்களுக்கு வேண்டிய துணிகளைக் கைத்தறியினால் செய்துகொண்டுவிடலாம். அதோடு கிராமங்களிலே கொஞ்சம் முதலுள்ளவர்கள், நெசவுகாரர்கள், இதர வேலையாளர்கள் ஆகிய ஒவ்வொருவருக்கும் வேலைகிடைக்கும்.

(5) படித்த இந்தியர் வேலையில்லையே என்றும், யோக்கியமான உழைப்பில்லையே என்றுங் குறையுடனிருக்கின்றனர். இக்குறை கைத்தறியினால் நீங்கும்.

கைத்தறியின் விசேஷத்தைப் பற்றி இவ்வளவுதான் சொல்ல முடியுமென்று நினைக்க வேண்டாம். சுதேசியத்தை முன்னுக்குக் கொண்டுவர ஆலைத்தொழில் நல்ல உதவியாகுந்தான். ஆனால் ஆலைத்தொழிலிலே, முதலாளிக்கும் தொழிலாளர்க்கும் மனக்கசப்பான போராட்டமும் சச்சரவும் குணக் கேடும் உள. இவை ஒருபுறமிருக்க, சுத்த சுதேசியத்தினால் நாம் விரும்பும் காரிய சித்தியை ஆலையினால் அடைந்துவிட முடியுமா வென்பதே கேள்வி. இந்தியாவின் தொழில்களைப் பற்றி எழுதுவோருக்கு இந்தியாவின் வருங் காலத் தொழில் நிலையைப் பற்றி என்ன அபிப்பிராய மிருந்த போதிலுஞ் சரி; இத்தேசத்திலே பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படத் தொடங்கிய காலத்திற்கூட கை நூலும் கைத்தறி நெசவுமே விவசாயத்திற்கு அடுத்த படியான ஜீவனோபாயங்களாக இருந்துவந்தன ; அவ்விரண்டுமே

இந்தியாவின் மிக்கப் பிரபலமான தொழில்களாகவிருந்தன; இந்தியாவில் விளைந்த பஞ்சு அவ்வளவும் கையினுல் நூற்கப்பட்டுவந்தது; வேலையெல்லாம் விவசாயிகளாலேயே நடந்தன; கைநூலும் கைத்தறி நெசவும் விவசாய சமூகத்தின் குறைவான வருமானத்தை ஈடு செய்தன என்ற விஷயங்களை அவர் சொல்லியிருக்கிறுர்.

வட இந்தியாவிலும் தென் இந்தியாவிலும் 1798-1814 ஆகிய வருஷங்களுக்கு இடையில் மேற்படி விஷயமாய் டாக்டர் புச்சானன் பரிசிலனை செய்து கண்டு பிடித்த புள்ளி விவரங்களை ராமேச சந்திர தத்தர் தமது "இந்திய செல்வ சரித்திரம்" என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிறுர். அதைப் பார்த்தால் லக்ஷாப லக்ஷக்கணக்கான நம் ஆண்மக்களும் பெண்மக்களும் அனேகமாக ஓய்வு நேரங்களிலே நாள்தோறும் அத்தொழில்களை நடத்தி, வருஷா வருஷம் கோடிக் கணக்கான ரூபாய்களை சம்பாதித்தார்களென்று புலப்படும்.

நமது வீட்டுத் தொழில்கள் இப்போதுள்ள பரிதாப நிலைமைக்கு வந்து விட்ட காரணம் உலகப்பிரசித்தம். அக்காரணத்தை மீண்டும் சொல்ல வேண்டியதில்லை. மேனுடுகளிலே தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் சச்சரவும் மனக்கசப்பும் போராட்டமும் உண்டாகி சமூகத்தையே நிலை குலைத்து வரும் ஆலைத் தொழில் காரணமான ராஜீயப் பொருளாதார சக்திகளை ஒழுங்கு படுத்த வேண்டுமென்பது நம்முடைய

பிரச்சினையன்று. சுதேசியத்தாலே (நம் தேசத்திலே) மெய்யான ராஜீய சக்தியும் பொருளாதார வன்மையும் உண்டாக வேண்டுமென்றே நாம் விரும்புகிறோம்.

சுதேசிய விஷயம் திருப்திகரமாக ஏற்பாடாயின், வருஷத்தில் ஆறுமாதத்திற்கு மேல் வேறுவகையின்றி சோம்பியிருந்து, வருஷம் முழுமையும் அரை வயிறுண்டு, பாதியளவு தேகம் நிர்வாணமாகி நையும், நம்மவரிலே நூற்றுக்கு எண்பது பேர்களுக்குக் கதிமோக்ஷம் ஏற்பட்டுவிடும். சோம்பியிருக்கும் நேரங்களிலே அவர்களுக்குத் தக்க வேலையை நாம் தேடிக்கொடுக்க வேண்டும். அவர்களே நம் தேசத்திற்கு ஓர் ஆஸ்தி போலவும் சக்திபோலவும் ஆக வேண்டும். இதற்குச் சுத்த சுதேசியந்தான் வழி.

## 11. கைநூலும் கைநெசவும்

இயந்திரமயமாய்க் கிடக்கும் இக்காலத்திலே கைநூலையும் கைநெசவுத்தொழிலையும் தேசீயத் தொழிலாக்கிவிட முடியுமா வென்று சிலர் ஆராய்கின்றனர். ஆனால் அவர்கள் சில விஷயங்களை மறந்து விடுகிறார்கள். நூறு வருஷங்களுக்கு முன்னால் கைநூலும் கைநெசவும் பரம ஏழ்மைத்தனத்தினால் நேரும் சாவுக்கு பாதுகாப்பாயிருந்தன. இப்போதோ லக்ஷோப லக்ஷக்கணக்கான ஜனங்கள் தக்க ஜீவனோபாயமின்றி பரம துன்பத்திற்

காளாயிருக்கின்றனர். மேலும் ஆயிரக்கணக்கான பேரோ தக்க உணவின்மையாலும் பசிப்பிணியாலும் மரிக்கின்றனர். "விக்டோரியா ராணியின் ஆட்சிகாலத்தில் இந்தியாவின் செல்வ நிலை" யென்று பாபு ராமேச சந்திர தத்தர் என்பவர் எழுதியுள்ள புத்தகத்தில் பின் வரும் விஷயங் காணப்படுகிறது.

"டாக்டர் புச்சானன் என்பவர் 1813ௌ முதல் 1820ௌ வரையில் பரிசிலனை நடத்தி மேற்கண்டதொழில்களால் எத்தனை பெயருக்குப் பரிகாரங்கிடைத்து வந்தது என்று கண்டுகொண்டார். அவர் தேசமெங்குஞ் சுற்றிப்பார்த்தார். விவசாயத்திற்கடுத்த படியாகக் கை நூலும் கை நெசவுமே தேசீயத் தொழில்களென்று அவருக்குப் புலப்பட்டது. அவர் சொல்லியுள்ள புள்ளி விவரங்கள் பின்வருமாறு.

பாட்னா பீகார் என்ற ஜில்லாக்களின் ஜனத்தொகை 33 லக்ஷத்து 64 ஆயிரத்து 420. இதில் நூல்நூற் போர் தொகை 30, 30, 426. இவர்களிற் பெரும்பாலோர் நாள் தோறும் பிற்பகலிலே கொஞ்சநேரந்தான் நூற்பர். ஒவ்வொருவரும் வருஷத்தில் நூற்றநூலின் சராசரிவிலை ரூ. 7-2-8; எனவே மொத்தவருமானம் ரூ-23,67,277, அவர்கள் உபயோகித்த பஞ்சின் மொத்தக் கிரயம் ரூ. 12,86,272 ஆகும். எனவே மொத்தலாபம் ரூ. 10,81,005; ஒருவருடைய வருஷலாபம் ரூ 3-4-0.

ஷாபாத் என்ற ஜில்லாவில் நூல்நூற்றல் தான் பிரதமத்தொழில். 1,59,500 ஸ்திரீகள் நூல்நூற்றதில்

வருஷ மொன்றுக்கு ரூ 12,50,000 ஆயிற்று. பஞ்சின் விலையைக் கழித்துவிடின் ஒவ்வொரு ஸ்திரீக்கும் கொஞ்சம் லாபமுண்டு. அதனால் அவர்களுடைய குடும்ப வருமானம் கொஞ்சம் அதிகமாயிற்று.

பாகல்புரம் என்ற ஜில்லாவின் ஜனத்தொகை 20,19,900. அங்கே எல்லா ஜாதியாரும் நூல் நூற்று வந்தனர். 1,60,000 ஸ்திரீகள் தினம் சற்று நேரம் நூல் நூற்றுவந்ததனால் ஒவ்வொருவருக்கும் வருஷத்திலே ரூ 4-8-0 லாபம்.

கோரக்புரி ஜில்லாவின் ஜனத்தொகை 13,85 495. 1, 75, 600 ஸ்திரீகள் நூல் நூற்றுவந்தனர். வருஷத்திலே ஒவ்வொருவருக்கும் ரூ 2-8-0 வருமானம்.

திஞ்ஜ்புரம் ஜில்லாவின் ஜனத்தொகை மூன்று லக்ஷம். உயர் குடும்ப ஸ்திரீகளும் ஸரி, பெரிய விவசாயிகளின் மனைவிகளும் ஸரி, ஓய்வு நேரத்தில் செய்த விசேஷமான வேலை நூல் நூற்றலே. ஓய்வுநேரத்தில் நூல் நூற்றதனால் ஒவ்வொரு ஸ்திரீக்கும் வருஷவருமானம் மூன்று ரூபாய்.

பூர்ணியா ஜில்லாவின் ஜனத்தொகை 29,04,380. நூல் நூற்றலை ஓர் கௌரவமான தொழிலென்று அனைவரும் மதித்தனர். ஸ்திரீகளிலே பெரும்பாலோர் அவசரம் நேர்ந்தபொழுது நூல் நூற்று வந்தனர்.

மைசூரின் கிழக்குப் பாகத்திலே பிராமண குலத்தைத்தவிர எல்லா ஜாதி ஸ்திரீகளும் வாரச்சந்தையிலே பஞ்சும் உரோமமும் வாங்கி ராட்டினத்தில்

நூற்று நெசவுக்காரருக்கு நூலை விற்றுவந்தனர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் நூல்நூற்றல் லாபகரமான தொழிலாகவிருந்தது. கோயம்புத்தூரிலே கீழ்த்தர விவசாயிகளின் மனைவிகளனைவரும் பிரவித்திபெற்ற நூல் நூற்போராயிருந்தனர்.

நெசவுக் காரரின் புள்ளிவிவரங்களைப் பார்த்தாலே நூல்நூற்போரைப் போலவே அவர்களும் தொகையில் பெருத்திருந்தனர். பாட்னா நகரிலும் பீகார் ஜில்லாவிலும் மேல் வேஷ்டியும் மேஜைத்துணியும் நெய்துவந்த தறிகள் 750. அத்தறிகளால் ஒருவருஷம் நெய்த துணிகளின் விலை ரூ 5,40,000, நூலின் விலையைக் கழித்தபிறகு லாபம் ரூ 81,400. ஆகவே, ஒருதறிக்குக் கிடைத்த வருஷலாபம் ரூ 108. அதாவது ஒவ்வொரு தறியிலும் மூவர் வேலை செய்து வந்தனரென்றால் ஒவ்வொருவருக்கும் வருஷவருமானம் 36 ரூபாய். ஆனால் நெசவு காரரில் பெரும் பாலரோ நாட்டுக்கு வேண்டிய மோட்டா வேஷ்டிகளையே நெய்து வந்தனர். இதன் கிரயம் நூல் விலைபோக 243, 86, 021 ரூபாய். அதாவது ஒவ்வொரு தறிக்கும் கிடைத்தலாபம் 28 ரூபாய்.

ஷாபாத் ஜில்லாவிலே நெசவுகாரர் பருத்தி ஆடையையே நெய்து வந்தனர். 7025 நெசவு காரரிடம் 7950 தறிகள் இருந்தன. ஒவ்வொரு தறியிலும் வருஷ வருமான ரூபாய் 20—12—0; வேலை செய்தவர்கள் கணவன், மனைவி, ஒரு குழந்தை ஆகிய மூவர். ஆனால் 48 ரூ கிடைத்தாலல்லாமல் ஒரு குடும்பம் வாழ

முடியாததலால், ஒவ்வொரு தறிக்கும் கிடைத்ததாக மேலே சொல்லப்பட்டிருக்கும் வருமானம் கணக்கில் குறைவாகக் காட்டப்படிருக்கவேண்டும்.

பாகல்புரம் ஜில்லாவிலே சிலர் பட்டு நெசவு மட்டும் செய்து வந்தனர். நகரினருகே யிருந்த நெசவு காரரில் பலரோ பட்டும் பஞ்சும் கலந்த ஆடையை நெய் து வந்தனர். 3275 தறிகள் வேலை செய்ததில் ஒவ் வொருவருக்கும் வருஷவருமானம் ரூ 46 ; இதைத் தவிற ஸ்திரீகள் நூல்நூற்று சம்பாதித்து வந்தனர். பஞ்சாடை நெய்ய 7279 தறிகள் இருந்தன. ஒவ்வொரு தறிக்கும் வருஷாவருஷம் கிடைத்த தொகை ரூ. 20. ஆனால் மற்றொரு கணக்கின்படி பார்த்தால், கிடைத்த தொகை ரூ. 32 ஆகும்.

கோரக்புரி ஜில்லாவிலே 5434 நெசவு காரரிடம் 6174 தறிகள் வேலை செய்து வந்தன. ஒவ்வொரு தறிக்கும் 23½ ரூ கிடைத்து வந்தது. இது மிகவும் குறைவான மதிப்பு. ஆகையால் வருஷம் ஒன்றுக்கு 88 ரூ கிடைத்திருக்க வேண்டுமென்பது மற்றொரு மதிப்பு.

பூர்ணியா ஜில்லாவிலே நெசவுகாரர் மிகவும் அதி கம்; மைசூரின் கிழக்குப் பாகத்திலோ பஞ்சாடை நெய்வோர் வீட்டு உபயோகத்திற்கு ஆடை நெய்து வந்தனர். பட்டுத் தலைப்புள்ள துணி நெய்தோருக்கு கிடைத்த நாள் சம்பளம் ஆறணாதான் ; பட்டாடை நெய் தோருக்குக் கிடைத்துவந்த கூலி நாலணாவாகும்.

எனவே நூற்போரும் நெய்வோரும் தங்களது கண்ணியமான தொழிலை நடத்தி வந்ததனால், கோடிக் கணக்கான பணம் சம்பாதிக்கப்பட்டு வந்ததென்பது வெளிப்படை. ஜில்லா, பட்டணம், கிராமம் முதலிய எல்லா விடங்களிலும் நெசவுத் தொழில் நடத்தினதால் அங்குள்ளோருக்கு வேண்டிய ஆடைகள் அங்கங்கேயே இலகுவில் கிடைத்துவந்தன; இப்போது துணி வாங்குவோரே ரயில் கட்டணம், இறக்குமதிவரி, தரகனது லாபம் முதலிய இனங்களில் நேரும் செலவையுஞ் சேர்த்து விலையாகக் கொடுப்பது போல் அப்பொழுது இல்லை. முன் எல்லோருக்கும் அங்கங்கே இலகுவாகப் பிழைப்பும், மலிவாகத் துணியும் கிடைத்து வந்ததுபோல் இப்போதும் கிடைக்கும்படிசெய்ய ஏன நாம் முயலக் கூடாது? இப்படிச் செய்யாமற் போய் விட்டாலும், நம்முடைய கடைகளில் வந்து மலைபோற் குவியும் அன்னிய ஆடைகள் வராதபடியாவது சீக்கிரம் செய்ய முடியாதா ?

## 12. நூலிழைப்பது.

நூலிழைப்பதைக் கண்டு "இந்திய ஊழியன்' பத்திரிகை சிரிக்கிறது. அதற்குக் காரணம் விஷயத்தை அறியாததேயாகும். நூலிழைப்பதால் ஒரு ஸ்திரீயின் கற்பு காக்கப்படும். எவ்வாறெனில், ஜீவனோபாயத்தைக்கருதி,

ஸ்திரீகள் ராஜபாட்டைகளிலே வேலை செய்கின்றனர். இதனால் அவர்களுடைய கற்புக்குப் பங்கம் வரக்கூடிய சமயங்களுண்டு. ஆதலின் லக்ஷக்கணக்கான ஸ்திரீகள் கௌரவமாய்ப் பிழைப்பதற்கு ஏற்ற சாதனம் நூலிழைப்பதே; இதைத் தவிரவேறு உபாயம் இல்லை. பல ஸ்திரீகள் ரஸ்தாக்களில் வேலை செய்வதை விடுத்து, வீட்டிலிருந்து நூலிழைக்கத்துடங்கி விட்டனர். இத்தொழிலே நல்ல தொழில் என்று நவில்கின்றனர். பரிகாசமாக எழுதும் அந்த ஆசிரியர் மேற்படி விஷயத்தைக் கவனிப்பாராக.

கைராட்டினம் சுழலுவதைக் கண்டு பல ஸ்திரீகள் மனங்களிப்பதை நான் அறிவேன். ஏனெனில் அதனால் உடையும் உணவும் கிடைக்குமென அவர்களுக்குப் புலப்படுகிறது. இந்தியாவிலே வேரூடிவிட்ட ஏழ்மையையும் கைராட்டினம் போக்கிவிடும். பஞ்சம் வரினும் அது ஓர் ஊன்றுகோலாகும். நீர்ப்பாசன வேலை யென்ன, பஞ்ச நிவாரணவேலையென்ன, இவைகளிலுள்ள ஆபாசங்களை அந்த ஆசிரியர் அறியாதிருக்கலாம். அவ்வேலைகளெல்லாம் பெரும்பாலும் மோசமே; ஒவ்வொரு வீட்டிலும் கைராட்டினத்தைப் பரப்பிவிடின், பஞ்சம் வராமல் தடுப்பதற்கு அனேகமாக அது ஒரு கருவியாகும்.

இந்தியாவின் காமதேனு எதுவென்று எனக்கு தெரியும். கைராட்டினமே அந்தக் காமதேனு. ஈஸ்டு இந்தியா கம்பெனியார் வருவதற்கு முன் இந்தியாவிலே ஒவ்வொரு வீட்டிலும் கைராட்டினம் இருந்துவந்தது. இந்தியாவில்

ஏராளமாகப்பஞ்சு விளைவதால் வெளியிடங்களிலிருந்து ஒரு கஜ நூலாவதும் வரவழைத்தல் பரம குற்றமாகும்.

1917-18-ம் வருஷத்திலே இந்தியாவில் 62 கோடியே 7 லக்ஷம் ராத்தல் நூல் நூற்கப்பட்டது; ஆயினும் இன்னும் எவ்வளவோ கோடிக்கணக்கான ராத்தல் நூல்களை இந்தியா இறக்குமதி செய்திருக்கிறது. மில்களில் தயாராவதை விட கைத்தறிகளில் அதிக ஆடை தயாராவதை அந்த ஆசிரியர் அறியாதிருக்கக்கூடும். அந்த நூலிலே பெரும் பாகம் அன்னிய தேச நூல். ஆகவே நம் தேச நெசவுகாரர்கள் அன்னிய தேசத்திலே நூலிழைப் போரை ஆதரிப்பவர்களாய் இருக்கிறார்கள். இப்படி ஆதரிப்பதைவிட வேறு ஏதாவது வேலை செய்யினும் நலமாயிருக்குமென நான் நினைக்கிறேன்.

நூலிழைக்குந் தொழில் அடிக்கடி கட்டாயமாய் நிறுத்தப்பட்டுப் போனவுடனே, அடிமைத்தனமும் சோம்பலும் நம்மிடம் வந்து புகுந்து கொண்டன. நம் தேவைக்குவேண்டிய வளவு ஆடைகளை நம் ஆலைகள் தயாரிக்கமுடியா; தயாரிப்பினும் துணி விலை குறையாது. மில் சொந்தக் காரர் பணத்திற்கும் போராடுவர். ஆகவே, தேசத்தினரின் தேவைக்கு ஏற்றவாறு வேலையை ஒழுங்கு படுத்தார்.

ஆதலின், ஏழைக் கிராமவாசிகட்கு லட்சோப லட்சக் கணக்கில் தனங்கிடைக்கும் வண்ணமே நூலிழைத்தல் ஆதரிக்கப்படுகிறது. விவசாய தேசத்திற்கு ஒரு துணைத் தொழில் தேவை. ஏனெனில் ஓய்வு நேரங்

களிலே விவசாயிகளுக்கு ஒரு தொழில் இருக்கவேண்டும். கைநூலிழைப்பதே எக்காலத்தும் இந்தியாவின் தொழிலாக இருந்து வந்திருக்கிறது. புராதனமான தொழிலை உயிர்ப்பித்தல் கடினமான காரியமா என்ன? அப்புராதனத் தொழில் நசித்ததனால் தான், அடிமைத்தனமும் ஏழ்மையும், உலகெலாம் கண்டு வியக்கும்படி இருந்த கலைஞான மறைவும் இத்தேசத்தில் உண்டாயின.

இப்போது சில புள்ளி விவரங்களைச்சொல்லுவோம். நான்குமணி நேரம் வேலை செய்யின் ஒரு பையன் கால் ராத்தல் நூலிழைப்பான். 64 ஆயிரம் பிள்ளைகள் தினம் 16,000 ராத்தல் நூல் நூற்கிறார்கள். ஒரு நெசவுகாரன் தினந்தோறும் 2 ராத்தல் நூல் நெய்தால் இந்த 16, ஆயிரம் ராத்தல் நூலைக்கொண்டு நெய்து 8 ஆயிரம்நெசவுகாரர் பிழைப்பர். நூலிழைப்பதைப் பிரபலப்படுத்தவும், நமக்கு வேண்டிய ஆடைகளுக்கான அத்தனை நூலையும் இவ்வருஷத்திலேயே நூற்கவும், இவ்வருஷத்திலே மாணவரும் பிறரும் நூற்றுத்தான் ஆகவேண்டும். அப்படிச் செய்தால் பழைய குற்றத்திற்குப் பிராயச்சித்தம் பண்ணியது போலாகும்.

தேசத்தினர் சோம்பேறிகளாயிராமல் எல்லோரும் முயன்றால் காரியசித்தி மிக்க சுலபம்; தியாககுணம் கொஞ்சம் இருந்தால் வேறு பலனொன்றும் இல்லாமற் போயினும், வருஷாவருஷம் கொள்ளை போகும் 70 கோடி ரூபாயையாவது நிறுத்தி விடலாம்.

யந்திர சாலைக்காரர், அர்த்த சாஸ்திரிகள், வியாபாரி

கள் ஆகிய பலருடன் பேசிப்பார்த்தேன். மேற்கண்ட விஷயத்தை மறுத்துரைக்க அவர்களில் யாராலும் ஆக வில்லை. மகத்தான இந்த விஷயத்தை மிக்க கவனமும் தகவலும் கொண்டு இந்திய ஊழியன் பத்திரிகை நோக்குமென நம்புகிறேன்.

## 13. கைநூல் தேவை.

சட்ட மறுப்பில் ஒருவன் இறங்குவதாயின், அவனுக்கு நூல் நூற்கத் தெரியவேண்டும்; அதோடு கைநூலைக்கொண்டு கைத்தறியில் தயாரான கதர் துணி யையே அவன் அணியவேண்டும். ஒரு ஜில்லாவோ தாலூக்காவோ சட்டமறுப்பில் பிரவேசிப்பதாயின், அந்த ஜில்லாவுக்கு வேண்டிய ஆடை யவ்வளவும் அந்த ஜில்லாவிலேயே தயாராகவேண்டும். இந்த நிபந் தனைகளை யனுசரித்தால் தான் சட்ட மறுப்பில் இறங்க லாம் என்று டில்லியிலே அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டினர் தீர்மானித்தனர். அந்நிபந்தனைகள் கூடவே கூடா தென்று அப்போது திர்மானமாக ஆக்ஷேபம் பிறந்தது. கைநூலின் அவசியத்தைச் சிறிதும் அறியாத தினால் தான் அவ்விதம் பலர் ஆக்ஷேபித்தனர். கை நூல் தொழிலைத் தவிர, வேறு எதுவும் நம் தேச வறு மைப் பிணியைப் போக்காது. வறுமைப் பிணியால் வாடு வோர் தியாகஞ் செய்து மனப்பூர்வமாய்க் கஷ்டப்பட

முற்பட்டார். பிச்சை யெடுக்காமல் போஷித்துக் கொள்ளும் திறமை தான் சுயராஜ்யமென்று அவர்கள் கருதியிருப்பர். அதிருப்தியைப் போக்குவதற்கு ஒரு வழியைக் காட்டாமல் அதிருப்தியை வளர்த்து விட்டால், நாசமும், அராஜகமும், அக்கிரமமும், கொள்ளையும் கட்டாயம் நடக்கும். இதனால் பெரிதும் கஷ்டப்படுவோர் ஏழைகளே யாவர். வரும்படி போதாமையை நிவர்த்திக்கக் கை நூல் தொழிலே வழி. பலருக்கே கைத்தறி நெசவும், சிலருக்குப் பஞ்சுபட்டை போடுந் தொழிலும் பூரண பிழைப்புக்குச் சாதனங்கள்.

கைத்தறி நெசவு மறைந்துபோன தொழிலன்று. லட்சக்கணக்கான ஜனங்களுக்கு கை நெசவு தெரியும். சரியான கை நூல் தொழில் ஒரு சிலருக்கும் தெரியாது. இப்போது பதினயிரக்கணக்காய் கைராட்டினங்கள் சுழலுகின்றன வென்பது உண்மையே. ஆனால், வெகு சிலரே நூல் நூற்கின்றனர். கை நூல் பாவுக்குவரவில்லையே என்று எங்கும் கூக்குரல் கிளம்பியுளது. பாதியளவு பாகமான அன்னம் அன்ன மாகாது. அது போல் சரியாக நூற்கப்படாத நூல் நூலன்று. தேசத்திலே இப்போது நூற்கப்பட்டுவரும் நூலை அபிவிருத்திசெய்ய வேண்டுமானல், ஆயிரக்கணக்கான பேருக்கு நன்கு நூற்கத் தெரியவேண்டும். ஆதலின், சுயராஜ்யம் வேண்டுமென்று சட்ட மறுப்பில் இறங்குவோருக்கு கை நூல் தொழில் தெரியவேண்டிய தவசியம்.

சட்ட மறுப்பில் இறங்குவோர் நாள்தோறும் நூல்

நூற்கவேண்டு மென்பதில்லை. நூற்றால் நல்லதுதான். ஒரே சீரும் முறுக்கும் உள்ள நூல் நூற்க அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். அந்நியபந்தனைகளுக்கு ஆக்ஷேபமிருந்தாலும் அந்த ஆக்ஷேபம் செல்லவில்லை யென்பது நல்ல சகுனமே.

ஆக்ஷேபத்திற்கு ஆதாரமான ஒரு வாதம் என்ன வென்றால், கைக்கோளர் நூல் நூற்பதைக் கௌரவக் குறைவான தொழிலாக மதிப்பதாம். மிக்க வீரப்படைத்த ஸீக்கிய சமூகம் அவ்விதம் மதிக்குமென நான் கருதேன். யோக்கியமான ஜீவனோபாயத்தைக் கண்டு வெறுக்கும் எந்தமரபும் கீழ்நோக்கிக்கொண்டு போக வேண்யடிதுதான். நூல் நூற்றல் ஸ்திரீகளுக்குத்தான் பெரிதும் பொருந்துமென்றால், அதன் காரணமென்ன? அவர்களுக்கு அதிக ஓய்வு நேரம் இருப்பதே. அது மட்டத்தொழி லென்பதன்று. வாளையுருவி வீசுவோர் ராட்டினத்தைச் சுழற்றாரென்றால், அது வீரருக்குப் பொருந்தும் கருத்தன்று. வாள் கொண்டு வீசிப்பிழைப் போன் தன் சமூகத்துக்கு உழைப்பவனல்லன். மிக விசேஷமான சந்தர்ப்பத்திலும் தற்காப்புக் காகவும் நாக ரீகம் படைத்தோ ரென்ற ஜனங்கள் வாளை வீசுகின் றனர். இது இயற்கைக்கு மாறான ஜீவனோபாயம். பிற ரைக் கொன்று வயிறு வளர்ப்பதைக் காட்டிலும், கை நூல் தொழிலையும் கை நெசவையும் கொண்டு பிழைத் தல் என்றும் மிக்க ஆண்மையே. தனக்குரிய குல்லாய் தனைத் தானே தைத்துக் கொண்டதனால், வீரத்திலிரு

ந்து அவுரங்கஜீப் குறைந்தவரானரோ? கொல்லும்சக்தியைக் கொண்டு வீக்கியரை நாம் மதியோம். வீக்கிய வம்சத்தைச் சேர்ந்த ஸர்தார் லட்சுமணஸிங் ஒரு லட்சியத்துக்காக உயிரை விட்டார். அவரன்றே சுத்தவீரர்! நான்கானுஸாகிப் என்ற இடத்திலிருந்த மகந்துவானவர் கொலையாளி என்ற அவச்சொல் அவரை விட்டொழியாது.

கௌரவக் குறைவென்று யாரும் தப்பாகக் கருதாமல், உயிரூட்டும் தொழிலாகிய கை நூல் தொழிலைக் கற்க யாரும் பின்வாங்காரென நான் நம்புகிறேன்.

## 14. நூலிழைக்குங் கடமை.

கை நூலிழைப்பதனுல் நம் தேசத்திற்கு எவ்வளவு பலனுண்டென்று "சுயராஜ்ய ரகசியம்" என்ற வியாசத்தில் சொல்லியுள்ளேன். எந்தப் பாடத்திட்டத்திலும் வருங்காலத்திலே கை நூலிழைத்தல் கட்டாய பாடமாக இருத்தல்வேண்டும். சுவாசம் விடாமலும் ஆகாரம் புசியாமலும் நாம் வாழ முடியுமோ? முடியாது. அங்ஙனமே கை நூலிழைக்கும் தொழிலாகிய இப்புராதனத் தொழிலன்றி வருமைப் பிணியைத் தொலைக்கவும் பொருளாதார சுதந்திரம் அடையவும் முடியாது. ஒவ்வொரு குடும்பத்திலும் அடுப்பு எப்படி அவசியமோ அப்படியே கை ராட்டினமும் அவசியமாகும். நாள் தோறும் வேரோடி வரும் வறுமையைத் தொலைக்க வேறு வழியில்லை.

அப்படியானால் ஒவ்வொரு தேசியப் பாடசாலை யிலும் கைநூல் இழைத்தலை உபதேசித்து, கிரமமாக நூலை உற்பத்தி செய்யவேண்டுமென்று முன்பே யோசனை சொல்லியிருக்கிறேன். நமது பையன்களுக்கும் பெண் களுக்கும் நூலிழைக்கும் தொழில் தெரிந்து விடுமானல், அவர்கள் தங்கள் வீடுகளிலேயே அத்தொழிலைப் பிர பலப்படுத்தி விடுவர்.

ஆனல், அவ்விதம் காரியம் நடைபெற வேண்டின் ஒழுங்கான ஏற்பாடு செய்யப்படல்வேண்டும். நாள் தோ றும் அதற்கு 12-மணி நேரம் கைராட்டினம் சுழல வேண்டும். நூல் நூற்பதில் கை பழகியவர்கள் ஒரு மணி நேரத்தில் இரண்டரை தோலா எடையுள்ள நூல் நூற்க லாம். சராசரி இப்பொழுது ஒரு ராத்தல் நூலுக்கு 4 அணு கிடைக்கிறது. அதாவது ஒவ்வொரு ராட்டினத் திலும் நாளொன்றுக்கு 3 அணு கிடைக்கும். உறுதி யான ராட்டினத்தின் விலை ரூபாய் 7. தினந்தோறும் 12 மணிநேரம் வேலை செய்தால் 38 தினத்திலே ராட்டி னத்தின் கிரயத்தை எடுத்துவிடலாம். புள்ளி போட்டுப் பார்த்தால், கைராட்டினத்தில் ஆச்சரியமான பலனுண் டென்று புலப்படும்.

ஒவ்வொரு பாடசாலையிலும் நூலிழைக்குந்தொ ழில் போதிக்கப் படுமானல், கல்வியைப் பரவச்செய்யப் பணமில்லையே என்ற கஷ்டம் தொலையும். தினந்தோறும் 6-மணி நேரம் பாடசாலையை நடத்தி மாணவருக்கு இல வசமாகப் போதிக்க முடியும். ஒருபையன் நான்குமணி

நூலிழைப்பின், ஒவ்வொரு நாளும் 10 தோலா நூல் கிடைக்கும்; அதாவது, நாளொன்றுக்கு ஓரணு கிடைக்கும். முதல் மாதத்திலே அப்பையனுல் பாடசாலைக்கு ரூ 1-10-0 வரும்படி; 30 பையன்களுள்ள பள்ளிக்கூடத்திலே மாதம் ரூ 48-12-0 கிடைக்கும்.

பாஷாக் கல்வியைப்பற்றி நான் ஏதுவும் சொல்லவில்லை. ஆறுமணிநேரத்திலே இரண்டு மணிநேரம் பாஷாக் கல்வி புகட்டலாம். மிக்கப் பிரயாசையின்றி அதன் வரும்படியைக் கொண்டே ஒரு பள்ளிக்கூடத்தை நடத்திவர முடியுமென்பது வெளிப்படை; அனுபவமுள்ள ஆசிரியரையும் தேசம் அமர்த்திக் கொள்ள முடியும்.

மேற் சொல்லியபடி காரியம் நடக்க வேண்டுமாயின், ஏராளமான கைராட்டினங்கள் வேண்டும். நூலிழைக்கும் தொழில் பிரபலமாகும் பொழுதும் ஆயிரக்கணக்கான ராட்டினங்கள் தேவை. கிராமத்திலுள்ள எத்தச்சனும் சுலபமாக ராட்டினம் செய்வான்; மற்ற இடங்களிலிருந்து ராட்டினத்தைத் தருவிப்பதென்பது மிக்கத் தப்பாகும். நூலிழைத்தலில் விசேஷம் என்னவென்றால், அத்தொழில் மிக்க சுலபம்; மிக எளிதாகக் அதைக்கற்றுக் கொள்ளலாம்; ஒவ்வொரு கிராமத்திலும் அதிகச் செலவின்றி அதைப் பரப்பி விடலாம்.

நம்மைப் பரிசுத்தர்களாக்கிக் கொள்வதற்கும், சுயராஜ்யப் போருக்கு நமக்குத் தகுதி உண்டு பண்ணிக் கொள்ளவும் செலவிடும். இந்த ஒரு வருஷத்தில் அத் தொழிலைப் பரப்பினுல்போதும். சுயராஜ்யம் ஏற்பட்ட

பின்பு, நாள்தோறும் பாடசாலைகளிலே ஒரு மணி நேரம் நூலிழைத்தால் போதும்; மீதி நேரத்திலே பாஷாக்கல்வி போதிக்கப்படலாம்.

## 15. நூற்கும் கடமை.

[கல்கத்தாவிலே மீர்ஸாபுரி நந்தவனத்தில் பிரமாண்டமான மாணவர் மகாநாடு நடந்தபொழுது எல்லோரும் பாடசாலையை விட்டு விடுங்களென மாணவர்களை மகாத்மா காந்தி வேண்டிக்கொண்டார். அப்போது நூற்கும் கடமையைப் பற்றி அவர் சொன்னதாவது].

நமது தேசக் கல்விமுறை இரண்டு விதத்திலே பெருங்குறையுடையது. கல்வி முறையை ஒழுங்கு படுத்தியவர்கள், உடலுக்கும் உயிருக்கும் பயிற்சி யுண்டாக வேண்டுமென்பதைப் புறக்கணித்து விட்டனர். கவர்ன்மெண்டார் செய்துவருவதும் செய்யப் போவதுமான தீமையிற் கலந்து கொள்ளாமல் விலகி நிற்பதே ஒத்துழையாமை. அறிந்தே மனப்பூர்வமாய்த் தீமையிலிருந்து நாம் விலகி நிற்பின், கடவுளுக்கு முன்னிலையில் நாம் தலை நிமிர்ந்து நிற்க முடியும். இது தான் ஆத்மப் பயிற்சி. இப்பயிற்சியின்றி தற்காலக் கல்வி முறையில் எப்படி ஆத்மப் பயிற்சி உண்டாகும்? நம்முடைய சரீரப்பயிற்சி அலட்சியஞ் செய்யப்பட்டு விட்டது. கைராட்டினத்தை நாம் மறந்து விட்டதால் நாம் அடிமைகளாகி விட்டோம்;

ஒருசட்டி கூழுக்காக இந்தியா தன் ஆத்மாவை விற்று அதை இழந்துவிட்டது. இதை நான் அறிந்திருப்பதனுல் வங்காள வாலிபரே கைராட்டினத்தை மேற்கொள்ளுங்க ளென்று உங்களுக்குச் சொல்ல நான் அஞ்சவில்லை.

கை நூல் தொழிலிலும் கூடுமானவளவு நூலைச் சேகரிப்பதிலும் உள்ள பயிற்சிதான், சுயராஜ்யத்திற்கு அடிப்படை கோலும் படியான இத்தருணத்திலே, எப் போதும் உங்கள் முக்கிய சிந்தையும் காரியமுமாக இருக்க வேண்டும். சுயராஜ்யம் ஏற்பட்ட பின்பு, உங்களுக்குரிய சாதாரணமான கல்வியைக் கற்கத்தொடங்கலாம். வங்கா ளத்திலுள்ள ஒவ்வொரு வாலிபனும் சரி, பெண்ணும் சரி, தங்களுடையகாலத்தையும் உழைப்பையும் கை நூல் தொழிலாகிய சிறந்த தொழிலிலேயே செலவழிக்கவேண் டும்; யுத்தத்தைத் தவிர்த்து வேறு வழியாகவுள்ள கை நூல் தொழிலையே உங்களுக்குச் சுட்டிச் சொல்லு கிறேன். கவனிப்பீர்களாக.

## 16. கைராட்டினத்தின் போதம்

[கல்கத்தாவிலே ஸ்ரீமான்களான சித்தரஞ்ஜன தாஸ், ஜிதேந்திரலால் பானர்ஜி முதலிய ஒத்துழையாத் தலைவர்கள் ஏற்படுத்திய கல்விச் சபையின் ஆதரவிலே தேசியக்கலாசாலை யொன்று 1921ம் வருஷம் பிப்ரவரி 4உ திறந்து வைக்கப்பட்டது. அவ்வைபவத்தில் மாணவர்

களேயும் ஆசிரியர்களேயும் நோக்கி மகாத்மா காந்தி கூறியதின் ஸாரம்.]

சர்க்காவினுல் எப்படி நாம் சுதந்திரமடையலாம்; வியாபாரிகளாயும் பிரயாணிகளாயும் வந்த அன்னியர் நம்முடைய ஒத்துழைப்பினுல் எப்படி நம்மை ஆளுவோராயினர்; நம்முடைய மித்திரர்கள் போல் இங்கு அவர்கள் வாழவிரும்பாது போயின், ஒத்துழையாமையினுலும், இந்திய ராட்டினத்தினுலும் அவர்கள் எப்படித் தங்கள் தேசத்தை நோக்கி திரும்பிப்போய் விடுவர் என்ற விஷயங்களேப்பற்றி நாம் எவ்வளவோ பேசியாகி விட்டது.

முகம்மதியர் எங்ஙனம் அஹிம்ஸா தர்மத்தை மேற்கொள்ளமுடியும் என்று சிலர் கேட்கின்றனர். எங்ஙனமென்று நான் சொல்லப் போவதில்லே. கைராட்டினமே சொல்லும். நமது மசூதிகளிலே ராட்டினங்களே வைத்து விடின், முகம்மதியர் அஹிம்ஸா தர்மத்தை மேற்கொள்வரென்பதை ஐரோப்பா முழுவதும் அறிந்து கொள்ளும். மசூதிகளில் வைத்திருக்கவேண்டி 800 ராட்டினங்கள் செய்யும்படி ஏற்பாடாயிருக்கிறது. ஏனெனில், மசூதிக்கு வருவோர் நூல்நூற்க, அந்நூலேக்கொண்டு இந்தியரால் இந்தியருடைய வீடுகளில் நெய்யும் துணியைக்கொண்டு, நமது நிர்வாணத்தை நாம் மறைத்துக் கொள்ள வேண்டும். அல்லது நமக்குரிய குடுத்தாக்களே நாமே செய்துகொள்ளவேண்டும். ஒவ்வொரு முறை ராட்டினம் சுழலும் பொழுதும்,

இரத்தம் சிந்தாத இக்கலகம் தீரும் காலம் நெருங்கும்; இதுதான் கைராட்டினத்தின் போதம். ஆதலின் இப்போதனைப்படி நடப்பீர்களாக. நடப்பின், சாத்தியமான சமாதான வழியிலேயே சுதந்திரத்தையடைய நாம் தீர்மானித்து விட்டோமென உலகத்திற்குப் பறைசாற்றுவது போலாகும்.

தேசத்திற்குச் சுதந்திரம் கிடைக்கவேண்டுமாயின், இரண்டு நூற்றாண்டுகளாக நாம் ஆளாயிருக்கும் அடிமைத்தனம் நீங்க வேண்டுமாயின், நாம் சமாதான வழியில் போர்புரிய வேண்டும். அதாவது கைராட்டினத்தின் போராட்டமே.

## 17. கைராட்டினத்தின் தொனி.

கைராட்டினத்தைப் புகழ்ந்து ஒரு நிருபர் எழுதியிருக்கும் குறிப்பை "இந்தியன் ஸோஷல் ரிபார்மர்" பத்திரிகை பிரசுரித்திருக்கிறது. நூலிழைப்போர் அத்தொழிலைக் கண்டு சலித்துப் போய்விடாவண்ணம் ஒழுங்கான ஏற்பாடு உண்டாக வேண்டுமென்று அந்நிருபர் விரும்புகிறார். கத்தியாவாட் பிரதேசத்திலே கைராட்டினப் பரிசிலனை நடத்திவரும் ஸ்ரீமான் அமிர்தலால் என்பவர், விவசாய ஸ்திரீகள் ராட்டினத்தை மேற்கொண்டிருப்பதாக "இந்திய ஊழியன்" பத்திரிகையில் எழுதியிருக்கிறார். அந்த ஸ்திரீகளுக்கு மேற்படி தொழிலில் சலிப்பு ஏற்படாது. ஏனெனில் முன்னம்

கிடைத்ததைப் போல, இப்போதும் அது அவர்கள் பிழைப்புக்கு ஓர் சாதனமாயிருக்கிறது. ஆதியில் பிரபலமாயிருந்தும், கைநூலுக்குக் கிராக்கியில்லாததால் அத்தொழில் மறையலாயிற்று. ஒரு பிரமையினுலோ, லாபத்தில் ஆசையினுலோ மேற்கொண்டிருப்பின், நகரவாசிகளுக்கு அத்தொழிலில் சலிப்பு ஏற்படலாம்; இச்சமயம் தேசத்திற்குச் செய்ய வேண்டிய மிக உபயோகமான தொழிலாகிய நூலிழைப்பதில் ஓய்வுநேரத்தைக் கழிக்கவேண்டுமென்று கருதுவோர்தான், விடாமல் பக்தியுடன் நூலிழைப்பவராவர். கிராம விவசாய குடும்ப ஸ்திரீகள், நகரவாசிகள் ஆகிய இவர்கள் போக, மூன்ருவது படியாக நூல் நூற்க வேண்டியவர்கள் பாடசாலை மக்களாவர். தேசியப் பாடசாலைகளிலே கைராட்டினத்தைப் பரப்பும் பரீட்சையில் மிக்கப் பலன் கிடைக்குமென எதிர்பார்க்கிறேன். இந்தியாவிலுள்ள ஏழுரை லட்சம் கிராமங்களிலும் படிப்புப் பரவும்படி செய்ய கைராட்டினமே மிகவும் திறமையான சாதனமென்று நம்பும் ஆசிரியர்கள் முறைப்படி நடப்பின், நூலிழைப்பதில் சலிப்பு ஏற்படாது; மேலும் படிப்புக்கென்று பிரத்தியேகமாக வரி போடாமலும் குணக்கேடான வரி வருமானத்தை எதிர்பாராமலும், ஜனசமூகத்திற்குக் கல்வி போதிக்க வேண்டிய பணத்தையடைய வேண்டுமென்ற பிரச்சினைக்கு சமாதானம் கண்டு பிடித்தாகிவிடும்.

கைநூலிலே நேர்த்தியான ரகம் கிடைக்கும்படி வழி தேடவேண்டுமென்று "இந்தியன் ஸோஷல்

ரிபார்மர்'' பத்திரிகையின் நிருபர் கூறுகிறார். நேர்த்தியான ரகம் கிடைப்பதற்கான முயற்சி ஏற்கனவே உண்டு. டாக்கா ரவைசல்லா நெய்வதற்கான அவ்வளவு மெல்லிய நூலோ அல்லது 200ம் நம்பர் நூலோ கிடைப்பதற்கு இன்னும் கொஞ்ச நாள் ஆகவேண்டும்; சென்ற ஸெப்டம்பர் மாதத்தில் தான் கை நூலிழைக்கும் தொழிலுக்கு உயிரூட்ட முயற்சி பிறந்தது; டிசம்பர் மாதத்தில் தான் அதை இந்தியர் நம்பத்தொடங்கினர்; இப்படியிருக்க, இதற்குள் உண்டாயிருக்கும் முன்னேற்றம் மிக அதிகமே.

எவ்வளவு அதிகமாகக் கை நூல் இழைக்கப்படுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு உடனே நெசவு நடக்கவில்லை யென்பது ஓரளவு உண்மையே. இதற்குப் பரிகாரம் தறிகளின் தொகையைப் பெருக்குவதன்று; ஏற்கெனவேயுள்ள நெசவுகாரர் கை நூலைக் கையாளும்படி செய்ய நாம் முயலவேண்டும். நூலிழைப்பதைக் காட்டிலும் நெசவு சிக்கலான வேலை. நூலிழைப்பதைப் போல் நெசவுத்தொழில் துணைத்தொழிலன்று; ஜீவனோபாயத்திற்கு அது ஒரு பூரணமான தொழிலாகும். ஆதலின் நெசவுத் தொழில் அழியவில்லை. அன்னிய நாடுகளிலிருந்து வரும் ஆடைகளை விடுத்து, அவ்வளவு ஆடைகளையும் இங்கேயே தயாரிப்பதற்கு வேண்டிய நெசவுகாரர் உளர்; தறிகளும் உள. சென்னை, மகாராஷ்டிரம், வங்காளம் முதலிய இடங்களிலே ஆயிரக்கணக்கான தறிகள், சீமை, ஜப்பான் ஆகிய இடங்களிலிருந்து

வரும் மெல்லிய நூல்களைக்கொண்டு நெய்துவருகின்றன. அத்தறிகள் அனைத்தும் கை நூலைக்கொண்டு நெய்யும் படிசெய்ய நாம் முயலவேண்டும். இதற்காக நம் தேசத்தினர் மெல்லிய மல்வேஷ்டியிலும் உபயோகமற்ற ரவை சல்லாவிலும் ஆசை கொண்டிருப்பதை விட்டுவிடவேண்டும். உடலை மறைக்காமல், திறந்துகாட்டுவது போலுள்ள மெல்லிய ரவை சல்லாக்களை நெய்தல் நன்மையன்று என்பதே என் கருத்து.

மெல்லிய ஆடையையே எங்கும் நெய்யவேண்டுமென்று சாமானிய காலத்தில் நாம் கருதியிருக்கலாம். ஆனால் சுதந்திரம் பெறவும், நமக்குவேண்டியதை நாமே தயாரித்துக்கொள்ளவும், நாம் பிரமப் பிரயத்தனம் செய்யும் இக்காலத்திலே, கைநூலினால் தயாராகும் ஆடையைக்கொண்டே திருப்தியடையவேண்டும். ஆதலின், அழகிய மெல்லிய உடைதரிப்போர் மோட்டா உடையுடன் திருப்திபெறவேண்டும். அதோடு நூலிழைப்பவர்களோ இன்னும் நேர்த்தியாகவும் ஒரே சீராகவும் நூலிழைக்கவேண்டும்.

மில் அதிகாரிகள் தங்கள் துணியின் விலையைக் குறைக்கவேண்டுமென்று அங்கிருப்பர் வாதிக்கிறார். சுதேசிய அபிமானிகள் கதர் ஆடை அணிவதையே கடமையாகக் கருதிவிடும்பொழுதும், எவ்வளவு ராட்டினங்கள் ஓடவேண்டுமோ அவ்வளவு ஓடும்பொழுதும், நெசவுகாரர் கை நூலைக்கொண்டு நெய்யும்பொழுதும், மில் அதிகாரிகள் தங்கள் துணிகளின் விலையைக் குறைத்துத்தான் ஆகவேண்டும். லாபத்திலேயே திருஷ்டியா

யிருப்பவர்களை நோக்கி தேசாபிமானங் காட்டுங்களென்றால், அது பிரயோஜனமற்றதாகும்.

மகாநாடு முதலியவற்றில் மட்டும் கதர் ஆடை கட்டி, மற்ற சமயங்களிலே மிக அழகிய ஆங்கில நடையில் உடைதரிப்பதும், கதர் ஆடைதரிப்போர் விலையேறப்பெற்ற சுருட்டுப் பிடிப்பதுமான துர்வழக்கங்கள் புதிய நடை பிரபலமாகையில் மறைந்துவிடும். அன்னிய ஆடைகளை நாம் விலக்கியதும், தற்சமயம் நம்மிலுள்ள அவலக்ஷணக் காரியங்கள் நீங்கும். சாமானியரின் மனத்தில் குடிகொண்டிருப்பதுபோல் நேர்மையும் குடித்தனப்பாங்கும் வளரும்படி தேசியவாழ்வு திருந்தும். எளிய தேசத்தினரை அடித்துச்சாப்பிடுவதும், சமாதான வாழ்வுக்கு இடமின்றி கடற்படையையும் ஆகாயப்படையையும் ஆதாரமாகக் கொண்டு மயக்கும் மிருகத்தனமான நாகரீகமும் தொலையும். எல்லோரையும் அடக்கி ஆளவேண்டுமென்ற உணர்ச்சிக்கும் நாம் ஈடு பட இடமிராது. உலகிலே அத்தகைய மனப் பான்மை உதிக்க வேண்டுமென்பது தான் ஒத்துழையாமையின் நோக்கம். கைராட்டினத்தைப் பரப்பி முற்றிலும் பலனடைந்தால் தான், அத்தகைய மாறுதல் உண்டாகும். ஆசைக்கும் இடங்கொடாமல் காத்துக்கொண்டு, உணவுக்கும் உடைக்கும் தன் கையே தனக்குதவி யென்னும்படி நடந்துவரும்படியான யோக்கியதை நம்மிடம் உதித்தால்தான் உலகின் மனப்பான்மையை மாற்றி நாம் உலகினுக்கு நற்செய்தி யறிவிக்க முடியும்.

## 18. கீதையில் கைராட்டினம்.

கை நூலிழைத்தல் அனைவரும் செய்ய வேண்டிய பரிசுத்த வேலை யென்று சொன்னேன். அதற்கு வங்காள கவிசிரேஷ்டர் மறுப்பு எழுதினார்: அதற்கு முன்பே பதிலளித்தேன். கவியையும் அவரைப்போன்றவர்களையும் நம்பச்செய்ய வேண்டுமென்று மிக்க வணக்கத்துடன் பதில் தரவேண்டியிருந்தது. கை நூலிழைப்பதில் எனக்குள்ள நம்பிக்கை பகவத் கீதையிலிருந்து உண்டானதாகும்.

சரீர உழைப்பைப்பற்றி கீதையில் சொல்லப்பட்டுள்ளது. தியாகமாக உழைப்பது தான் பொது நல உழைப்பாகும். இத்தகைய பொது நல உழைப்பு கை நூலிழைத்தலே. கைராட்டினத்தைப் பற்றி கீதையில் சொல்லப்பட்டிருப்பதாக நான் சொல்ல வரவில்லை. நடத்தை விஷயமான முக்கிய அம்சத்தையே பகவத் கீதாசாரியார் சொல்லியிருக்கிறார். அதை நன்கு ஆராய்ந்து பார்க்கும் பொழுது, சரீரப் பிரயாசையான தியாகம் கை நூலிழைப்பதே யாகுமென நினைக்கிறேன்.

ஏழைகள் செய்யும் வேலையை நாளொன்றுக்கு ஒரு மணியாவது நாமனைவரும் செய்து, அதனால் ஏழைகளுடைய சுகதுக்கங்களில் நாமும் ஈடுபட்டு நமது சிரத்தையை தேசிய உழைப்புக்கு சமர்ப்பிப்பதால் உண்டா

க்கூடிய புகழைக்காட்டிலும் வேறுபுகழ் உலகில் எனக்குப் இருப்பதாக புலப்படவில்லை. கடவுளைத் தொழுவதென்றால், ஏழைகளுக்காக உழைப்பதைவிட வேறில்லை; உலகிலே எல்லோருக்கும் கிரமமாகச் செல்வங்கிடைக்கும்படி செய்வதற்குரிய சாதனம் கைராட்டினமே.

## 19. பஞ்சத்திற்குப் பரிகாரம் நூலிழைத்தல்.

ஆமதநகருக்கு அருகிலுள்ள மிரி என்ற இடத்தில் பஞ்சத்திற்குப் பரிகாரமாக நூலிழைக்கும் தொழிலை வைத்துப் பரீட்சை பார்ப்பதைப் பற்றி ஜெயவதி பிடிட்டின் மனைவி சில விஷயங்களை எழுதியனுப்பியிருக்கிறார். ஓர் ஆங்கில மாதின் மேற்பார்வையில் அப்பரிசீலனை நடப்பதால், அவ்விஷயங்களை மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன். முறைப்படி பரீசீலனை நடப்பதை அனைவரும் கவனிப்பார்களாக. இடையில் கஷ்டம் நேர்ந்தாலும், அது சமாளிக்கப்பட்டுள்ளது. பரிசீலனை பிரமாதமாக இல்லாமற் போனாலும், நூலிழைத்தல் பஞ்சப் பரிகாரத்துக்கு விசேஷமான சாதனமென்று புலனாகிறது. சரியாக நடத்தினால், நல்ல பலன் கிடைக்கும்.

1920ம் வருஷம் ஆகஸ்டுமாதத்திலே பஞ்சம் கனகடுமையாக இருந்தது. அப்பொழுது கௌரவமுள்ள மத்தியதர ஸ்திரீகளுக்குப் பஞ்சநிவாரணியாக நூலிழை

ப்பதைப்பரப்பலாமென்று தென்பட்டது. அத்தொழிலைப் பழக்கம் செய்துவைக்கும் வண்ணம் மிஸ் லாதாம் என்ற மாது ஒரு கைராட்டினங் கொடுத்து உதவினார். கம்பளி நூல் நூற்க ஆதியில் பழக்கமாயிருந்த தாங்கர் என்ற ஜாதியாருக்குள் நூலிழைத்தலைப் பரப்ப முயன்றும் பயன் படவில்லை. நூலிழைப்பதென்றால் என்ன வென்று தெரியாத கிராமத்திலே மெல்லிய நூல்நூற்றல் முடியாத காரிய மென்று பலரும் கருதினர். தவிர நூலிழைக்கும் தொழிலில் பணங்கிடைக்குமா அல்லது அது பயன்படுமா வென்றும் பலர் ஐயங் கொண்டனர். இத்தகைய ஆக்ஷேபங்களுக்கும் கஷ்டங்களுக்கும் இடையே, மூன்று மாதகாலம் ராட்டினம் தூங்கிக் கிடந்தது. தீவிரமாகமுயன்றும், ஒருவரும் அத்தொழிலை மேற்கொள்ளவில்லை. 1920ஞ டிசம்பரிலே மீண்டும் நான்கு ராட்டினங்களும் கொஞ்சம் பஞ்சும் மிஸ் லாதாம் அனுப்பினார். சிலரிடம் பரீக்ஷார்த்தமாக அவை கொடுக்கப்பட்டன. ஒரு ஸ்திரீ அத்தொழிலை மேற்கொள்ளலானாள். அப்போது 1921 ஜனவரி 20. அதன் பிறகே நிலைமை சற்று மாறலாயிற்று. ஒருஸ்திரீ அத்தொழிலில் இறங்கவே வேறு இருவரும் இறங்கலாயினர். மிக்க விடாமுயற்சியால் அம்மூவராலும் 4 ராத்தல் நூல் தயாராக உடனே அது விற்பனைக்கு அனுப்பப்பட்டது. இதற்குள் பல ஸ்திரீகள் அத்தொழிலைக் குறித்து விசாரிக்கத் தொடங்கி, ஏதேனும் கொஞ்சம் பணம் கிடைக்குமானால் அத்தொழிலை மேற் கொள்ளுவதாகக்

கூறினர். ஒரு ராத்தல் நூல் நூற்றால், ஆறணா ஊதிய மெனவே, பலர் அத்தொழிலைச் செய்யலாயினர்.

அச்சமயத்திலே பணக்கஷ்டம் வந்து விட்டது. இனாமாக வந்த 5 ராட்டினம் ஐவருக்குக் கொடுக்கப் பட்டாய் விட்டது. உள்ளூரிலேயே செய்த மற்ற 5ராட்டினத்திலும் ஐவர் வேலை செய்து வந்தனர். பஞ்சும் செலவாய் விட்டது. ஆகவே, ராட்டினம், பஞ்சு இவைகளைச் சேகரிக்கவும், நூலிழைப்போருக்குக் கூலி கொடுக்கவும், பணமில்லாமல் வேலை குந்தகப்படும் போலிருந்தது. ராவ்பகதூர் சித்தெல் என்பார் அக்கஷ்டத்தை யறிந்து, 100 ரூபாய் அனுப்பினர். நல்ல சமயத்தில் பணம் வரவே நூலிழைக்கும் தொழிலுக்குத் தக்க ஆதரவு கிடைத்தது. உள்ளூர் கனவான்கள் பஞ்சு கொடுத்து உதவினர். நாளுக்கு நாள் ராட்டினங்களுக்குக் கிராக்கி அதிகரித்தது. ராட்டினம் வாங்க முடியாமல் ஜனங்கள் அவ்வளவு ஏழைகளா யிருந்தனர். ஆகவே ராட்டினங்களைப் புதிதாகச் செய்து எரவல் கொடுத்தோம். 27 ராட்டினங்கள் செய்யப்பட்டதால், பஞ்சத்தினால் சோம்பியிருந்த தச்சருக்கும் வேலை கிடைத்தது ஒரு தச்சன் ராட்டினத்தை இலேசாகச் செய்ததோடு மெல்லிய நூல் இழைக்கும்படியும் அபிவிருத்தி செய்தான். தரவாரியாக ராட்டினத்தின் விலைரூ3; 3-8-0; 4, ஆக இருந்தது. 3 ராட்டினங்கள் ஒன்பதரை ரூபாய்க்கு விற்கப்பட்டன. ராட்டினங்களில் செலவான தொகை ரூ. 103-8-0.

உள்நாட்டிலேயே பஞ்சுகிடைத்தும், கைபழகுவோருக்கு அது பயன்படவில்லை. நாட்டில் கிடைக்கும் பஞ்சைச் சீராக்க ஒரு புதிய வழியைக் கண்டு பிடித்தோம். இதனால் நூலிழைக்கும் தொழிலுக்கு ஆதரவு கிடைத்ததோடு இன்னும் சிலருக்கும் பஞ்சினால் வேலை கிடைத்தது. மோட்டாப் பஞ்சை வாங்கிக் கொட்டையெடுக்கு முன்பே அது நன்கு கொட்டப்பட்டது. ஒரு ராத்தால் பஞ்சை சுத்தஞ் செய்தால் காலணாகூலி. இந்த வேலையைச்செய்த ஏழைக்கிழவனும், நாளொன்று 4 ராத்தல் சுத்தஞ்செய்து, ஓரணா சம்பாதிக்க இடமுண்டாயிற்று. இப்படிச் சுத்தஞ் செய்தபின் பஞ்சிலிருந்து கொட்டை எடுப்பதில் சில ஸ்திரீகளுக்குப் பிழைப்புக்கிடைத்தது. பஞ்சுக்கொட்டை யெடுக்க ஓரணா கூலி. இவ்வேலையில் ஒரு ஸ்திரீ சம்பாதிக்கக் கூடிய தொகை நாளொன்றுக்கு அணா 2-6; கொட்டை எடுத்த பின்பும் அதை சுத்தமாக்க ஒரு ராத்தலுக்கு ஒரு அணா வீதம் ஒருவனுக்கு நாள் தோறும் எட்டணா கிடைத்தது. மில்லிலிருந்து நூலிழைத்த பஞ்சு வாங்கிக் கொடுத்தால் நலமாகவும், மலிவாகவும் இருந்திருக்கலாம். ஆனால் பஞ்சைச் சுத்தம் பண்ணுவதில் சிலருக்கு வேலை கிடைப்பதால், மில்லிலிருந்து வாங்க இஷ்டப்படவில்லை. சுத்தஞ் செய்வதில் செலவாகும் கூலியில் பெரும்பாகம் பருத்திக் கொட்டையிலிருந்து ஈடு செய்யப்படுகிறது. இதைப் பற்றிய புள்ளி விவரம் பின் வருமாறு:—

ரூ-அ-பை

240 ராத்தல் 20 ரூ. வீதம் 60 ராத்தல் பருத்
திக்கு ... ... 5--0--0

ஒரு ராத்தலுக்குக் காலணு வீதம் 60 ராத்தல்.
சுத்தஞ் செய்ய .... 0-15-0

10 ராத்தலுக்கு ஒரு அணு வீதம்
52 ராத்தலில் கொட்டை எடுக்க 0--5--3

ஒரு ராத்தலுக்கு ஒரு அணு வீதம்
17 ராத்தலை மீண்டும் சுத்தஞ் செய்ய 1--1--0

ஆக 60 ராத்தல் மோட்டா பஞ்சுக்கு
ஆகும் தொகை .... ... 7--5--3

20 ராத்தல் கொட்டை ஒரு ரூபாய் வீதம்
35 ராத்தல் கொட்டையில் கிடைத்த தொகை 1--12-0

இது போக 17 ராத்தல் சுத்த பஞ்சின் விலை 5--9--3

எனவே ஒரு ராத்தல் சுத்த பஞ்சின் விலை 0--5--3

60 ராத்தல் மோட்டா பஞ்சில் 35 ராத்தல் கொட்டை போக 17 ராத்தலே நல்ல பஞ்சாக, 8 ராத்தல் சேதமாகும். இவ்வளவு சேதம் மிக அதிகமே. மோட்டா பஞ்சையே நல்லதாக வாங்கியிருந்தால் இவ்வளவு சேதம் ஏற்பட்டிராது.

இப்போது 29 ராட்டினங்கள் ஓடுகின்றன. இன்னும் பல ராட்டினங்கள் தேவை. ஆயினும் பணமில்லாத

தால் ராட்டினங்களைச் செய்து கொடுக்க முடியவில்லை. நூலிழைப்பதையே முன்பின் அறியாதவர்கள் இப்போது நூலிழைத்து வருகிறார்கள். ஆதலின் நூல் இன்னும் மட்டமாக இருக்கிறது. எனினும் நாளுக்கு நாள் நூலின் நயம் அபிவிருத்தியாகிறது. நல்ல ஆசிரியர் கிடைப்பின், நூலிழைக்கும் தொழில் இன்னும் அபிவிருத்தியாகும். நூலிழைப்போரிற் சிலர் நாள் முழுதும் வேலை செய்கின்றனர்; மற்றுஞ் சிலரோ ஒய்வு நேரத்தில் வேலை செய்வோரா யிருக்கிறார்கள்.

இப்போது தினந்தோறும் 2 ராத்தல் நூல் தயாராகிறது. நூலிழைப்போருக்குக் கைபழக பழக நூலின் அளவும் அதிகரிக்கும், ஒரு ராத்தல் நூலுக்கு 6 அணு கூலி யென்று திட்டப்படுத்தியிருப்பதைக் கண்டு பலர் முணு முணுப்பினும், அவ்வளவு தான் கூலி கொடுத்து வருகிறோம். ஏனெனில், விலைக்கு அனுப்பிய நூல் ராத்தல் முக்கால் ரூபாய் வீதம் விலை போனதால், ஒரு ராத்தல் நூலிழைக்கக் கொடுக்கும் கூலியை உயர்த்த முடியவில்லை. உயர்த்தினால் நஷ்டம் உண்டாகும். ஒவ்வொரு ராத்தல் நூலுக்கும் செலவு ரூ 0-11-3; பருத்தி விலை ரூ0-5-3; நூல் நூற்க ஆறணு கூலியாகிறது. எனவே ஒவ்வொரு ராத்தல் நூலுக்கும் கிடைக்கும் லாபம் முக்காலணு. சிப்பந்திச் செலவு, ஆபீஸ் செலவு முதலியவற்றைக் கணக்கிடவில்லை. இந்த ஆறணு கூலி வீதத்தின்படி, நாள்தோறும் 20 முதல் 25 தோலா வரை நூற்பதால், ஒரு ஸ்திரீக்கு 3 அணு

கிடைக்கிறது; தினந்தோறும் 15 தோலா நூற்பதால் பலருக்கு இரண்டணு கிடைக்கிறது; மீதியுள்ளோர் 10 தோலா நூல் நூற்பதால் ஒரு நாளைக்கு ஒன்றரை யணு பெறுகின்றனர். எவ்வளவுக் கெவ்வளவு நூலி ழைப்பதில் கைபழகுகிறதோ அவ்வளவுக் கவ்வளவு பணம் அதிகமாகக் கிடைக்கும்.

அந்த நூலைக் கொண்டு நெய்ய முயன்றோம்; ஒரு நெசவு காரனிடம் 3½ ராத்தல் நூல் கொடுக்கப்பட்டது. அவனே மிகவும் அதிகமாகக் கூலி வேண்டினன். அதாவது ஒன்பதரை கஜம் துணிக்கு ரூ. 3-9-0; என வே ஒரு ராத்தல் நூலை நூற்க ஒரு ரூபாய்; துணியின் விலை ரூ. 6-0-6. ஆக, அது போன விலை ரூ. 6-3-0; எனவே லாபம் ரூ. 0-2-6. நெய்வதிலுள்ள கஷ்டத்தைப் போக்க வேண்டின், நெசவைக் கற்றுக் கொடுக்க ஓர் ஆசிரியருடன் அறையொன்றுவேண்டும். பலருக்கு அத் தொழிலைக் கற்றுக்கொள்ள ஆசையிருக்கிறது. தனியே ஒரு தறியிருப்பின், துணியின் விலை குறையும். நெச வுக்கு எவ்வளவு கூலி ஆகிறதென்று நன்கு பரீட்சை பார்க்க, வேறு சில நெசவுகாரரிடம் 6 ராத்தல் நூல் கொடுத்திருக்கிறோம். எனினும் இக்கஷ்ட மெல்லாம் அகல வேண்டின், தனியே ஒரு தறி இருந்தால் தான் ஸாத்தியமாகும்.

பஞ்சு தட்டிப் போய், நூலிழைப்போருக்கு வேலையில்லாதிருந்த பொழுது, பஞ்சுக்குப் பதிலாக ஆட்டு ரோமம் கொடுக்கப் பட்டது. தான்கர் என்ற

ஜாதியார் அதைக் களிப்புடன் பெற்றுக்கொண்டனர். தொழிலைக் கற்றுக்கொள்ள சிறிது காலமான போதிலும், இப்போது 19 பெயர் நேர்த்தியான கம்பள நூல் இழைத்து வருகின்றனர். இவர்களுக்கும் ஒரு ராத்தலுக்கு 6 அணாதான் கூலி. 2 ராத்தல் ஒரு ரூபாய் வீதம் 31 ராத்தல் ஆட்டு ரோமம் வாங்கப் பட்டது. பஞ்சு கிடைத்தபின்பும், கம்பளி நூலிழைத்தல் நடந்து வரலாயிற்று. இதற்காகத் தனியே ஓர் இலாகா வைத்தோம். தான்கரில் பலர் அத் தொழிலில் இறங்கலாயினர். உரோமத்தை சுத்தஞ் செய்யும் வேலை அந்த ஜாதி ஸ்திரீகளாலேயே நடந்து வருகிறது; இதிலும் அவர்கள் ராத்தலுக்கு ஓரணா பெறுகிறார்கள். உரோமத்தை நான்கு தரவாரியாகப் பிரித்து வருகிறோம். பலர் தங்கள் ராட்டினத்திலேயே நூலிழைத்து வருகிறார்கள். ஆனால், சிலரோ நல்ல நூலிழைக்கும் படியான புது மாதிரி ராட்டினம் விரும்புகின்றனர். தான்கர் நெசவுகாரர் இருப்பதால், நேர்த்தியான நூல்களைக் கொண்டு பலரகமான கம்பளிகள் நெய்யப்படுகின்றன; புதுமாதிரியான கம்பளி நெய்யவும் யோசனை சொல்லியிருக்கிறோம். அவர்கள் மிகவும் பிடிவாதக் காரராதலின், புதிய விருத்தி மார்க்கத்தில் சீக்கிரம் ஈடுபடுவதில்லை. எனினும் மேற் கண்டவாறு வேலைசெய்து வருவதால், புது மாதிரியான கம்பளிகள் நெய்யத்தலைப்பட்டிருக்கிறார்கள். இதனால் அவர்களுக்கு நிரந்தரமான பலனிருக்கும்.

அகலமும் புது மாதிரியுமான தறிகளும், கம்பளிக்குச் சாயமிட போதனையும் அவர்களுக்குத் தேவை. நெசவில் புது வழியைக் கையாளக்கூடிய கெட்டிக்கார நெசவுகாரனைத் தேடிவருகிறோம். இரண்டு கம்பளிகள் தயாராகவே, இரண்டும் கொள்முதலுக்கே விற்கப்பட்டன. ஒன்றின் விலை ரூ. 5-13-6 ; மற்றொன்றோ ரூ. 6-6-0. கம்பளிகள் தேவையெனப் பலர் கேட்டிருக்கிறார்கள். ஆனால் நெடுக அத்தொழிலை நடத்தப் பணம் வேண்டும்.

இவ்வளவு பெயருக்கு வேலை கிடைக்கும்படி செய்தல், பஞ்ச பரிகாரத்துக்கு நல்ல வழியென்பதோடு, குடிசைத்தொழிலை விருத்தி செய்யவும் சாதனமாகும். அதோடு அடிக்கடி பஞ்சம் நேருவதால் உண்டாகும் குணக் கேடுகளையும் போக்கலாம். ஒரு மாதத்தில் நடத்திய பரிசிலனையிலே இவ்வளவு வேலை நடந்திருக்கிறது. புது மாதிரியான தறியும், தனியே நல்ல ஆசிரியரும், கம்பளிக்குத் தனியே ஒரு தறியும், (பக்கத்துக் கிராமத்திலிருந்தும் பலர் ராட்டினம் வேண்டு மென்பதால்) நிறைய ராட்டினங்களும் இன்னும் பல சாமான்களும் தேவை. வேலை தீவிரமாக நடந்துவருகிறது. பணத்தட்டினால் வேலை நில்லாதென நம்புகிறோம்.

## 20. கைராட்டினத்தின் விசேஷம்.

மழையைப் போல் உலகெங்கும் நீரைப்பரப்ப மனித யுக்தியினாலாகுமோ? நீர்ப்பாசன இலாகாவும் சரி, நீர்வரி

யும் சரி, வேறு எந்த உபாயமும் சரி, உலகெங்கும் நீரை நிரப்ப அது இயலாது. மழையினால் தான் ஆகும். அங்ஙனமே மிகவும் சாமானியமான வழியில் லட்சோப லக்ஷக்கணக்கான ஜனங்களுக்கு வேலையுஞ் செல்வமும் அளிக்கவல்லது கைராட்டினமே. நெற்றி வியர்வை நிலத்தில் விழும் வண்ணம் உழைத்து ஊதியம் பெறுவதை அறியாதோர், என்னே! ஒரு நாளைக்கு மூன்றணா தானா வரும்படி பெறுவது? என்று நினைப்பர். அக விலை மிக விலையாயிருக்கும் இக்காலத்திலும் நாள் தோறும் மூன்றணா கிடைப்பின் அதை ஒரு நிதிபோல் கருதும் ஏழைகளுள்ள ஜில்லாக்கள் அனேகம் உள.

தனிப்பட்ட தொழிலுக்கு இவ்வளவு தானே ஊதியம் கிடைக்கு மென்பதைக் கொண்டு மட்டும், ராட்டினத்தின் விசேஷத்தை மதிப்பதற்கில்லை. தேசிய கதி மோக்ஷத்தை அளிக்கவல்ல ஒரு சக்தி ராட்டினத்துக்கு உண்டு. உண்மையான சுவயராஜ்யம் வேண்டு மென நாம் விரும்பின், செல்வச் சுதந்திரம் வேண்டும். இதற்கு ஒரு விதத்தில் அன்னிய ஆடை விலக்கல் சாதனமாகும். தவிற, நம் தேசத்தினருக்கு வேண்டிய உடைகளை நாமே தயாரிக்க வேண்டும். இது கைராட்டினத்தினால்தான் ஆகும். தேசத்திலுள்ள எல்லா மில்லுகளும் (ஆலைகளும்) சேர்ந்து முயன்றாலும், நம் தேவையை ஈடுசெய்ய முடியாது. மெல்லிய மில்துணியையே எல்லோரும் விரும்பிச்செல்லின் விலை ஏறிவிடும். ஏழைகள் வாங்க முடியாது; 1907-08ம் வருத்தில் துணிப்

பஞ்சம் நேர்ந்ததை அனைவரும் அறிவர். இத்தேசத்திலே கோடை, மாரி முதலிய முப்பருவத்திற்கும் ஏற்றது காதித்துணியே. கோடையிலே சுத்தமான காதித்துணியைத் தரித்து வந்திருப்பவர்கள் இனி மேல் உடம்பில் ஒட்டிக் கொள்ளக்கூடிய மல்லும் வில்லும் போடமுடியாதென்பர். சாதாரணமான மாரி காலத்தில் கம்பளியை விட காதித்துணி குளிர் தாங்கும். இந்தியாவின் சீதோஷ்ண ஸ்திதியை நோக்கின், உடைகளை அவ்வப் பொழுது துவைத்து உடுத்த வேண்டிய அவசியம் உண்டு. அடிக்கடி துவைப்பினும், காதித்துணிதான் நாள்பட்டு நிற்கும். ஒரு காலத்திலே தேசத்தார் அனைவருக்கும் காதித்துணிதான் உடையாக விருந்தது. வருஷத்தின் எக்காலத்திலும், உப்பொன்றைத்தவிர வேறு எதையும் வெளியிடங்களிலிருந்து தருவிக்கத் தேவையில்லையென்று பெருமைகொண்டிருந்த கிராமங்கள் பல உள. இத்தகைய நிலை எங்கும் இருப்பின், பணக்கொள்ளை நடவாது. ஒருவர் பொருளை மற்றவர் ஏகபோகமாய் அனுபவிக்க இயலாது. பராஜ்யம் இராது. தங்களுடைய சுயமதிப்பு, கௌரவம், சுதந்திரம் இவைகளுக்குப் பங்கமின்றி கிராமவாசிகள் தம் அதிகாரிகளுடன் உடன்படிக்கை செய்து கொள்ளலாம்; சுயராஜ்யம் பெறுவதற்குக் கூட அடக்கிக் கொள்ள முடியாதபடி ஆடம்பர வாழ்வைத் தலைமிஞ்ச விட்டு விடுவதா?

## 21. செல்வச் சக்கரம்

[விஸ்கான்ஸின் நாட்டிலிருந்து ஒரு நிருபர் மகாத்மாவுக்குக் கடிதமெழுதி "இந்தியாவின் ஏழ்மை நிலையைக் கை ராட்டினம் தீர்த்து விடுமா? தீர்த்து விடுமாயின் எங்ஙனம்" என்று கேட்டார். அதற்குப் பதில் பின் வருமாறு:—]

கை ராட்டினத்தைப் பரப்பாமல், இந்தியாவின் ஏழ்மை நிலையைப் போக்கிவிட முடியாது. இதுவே என் திடமான துணிவு. துணைத் தொழிலில்லாமல், லட்சோப லட்சக்கணக்கான இந்திய விவசாயிகள் பசியால் வாடுகின்றனர். தங்களுடைய அற்ப வரும்படியுடன் கை ராட்டினத்திலும் கொஞ்சம் காசு கிடைப்பின், பஞ்சத்தையும், பசிப் பிணியையும் விவசாயிகள் சமாளிக்கமுடியும். அதுமில்லுகளால் ஆகாது. கை நூலிழைக்கும் தொழில் ஒன்றால் தான் ஆகும். கையினால் நூலிழைக்கும் தொழிலை விட்டு விடும்படியான கட்டாயம் நேர்ந்த பொழுது அதற்குப் பதிலாக வேறு உதவித் தொழில் ஏற்படவில்லை. தன்னுடைய வருமானத்தில் காலளவு திடீரென்று குறைந்துவிடின், ஒரு மனிதனுடைய நிலை என்னாகும்?

இந்திய ஜனங்களிலே நூற்றுக்கு 85-க்கு அதிகமானபேர் தங்கள் காலத்திலே காலளவுக்கு மேற்பட்ட

காலத்தில் சோம்பித்திரிகின்றனர். எனவே, இந்தியாவின் விருத்த புருஷ சிரேஷ்டரான தாதாபாய் நௌரோஜி சொல்லிய வண்ணம் பயங்கரமான பணக்கொள்ளைபோவது ஒருபுறமிருக்க, அச்சோம்பலால் நாளுக்குநாள் இந்தியர் பரம ஏழைகளாகிவருகின்றனர். ஆதலின் ஏழ்மையைத் தவிர்க்க ஓய்வு நேரங்களிலே என்ன செய்வதென்பது முக்கிய விஷயம். இதற்குக் கைராட்டினத்தை மீண்டும் பரப்புவதுதான் வழி. கை ராட்டினத்தின் வழி யென்னும்பொழுது யந்திர சாலைகளையும் அன்னிய ஆடை விலக்கையும் பற்றி எனக்குள்ள விசேஷமான கருத்துக்களுக்கும் கை ராட்டினத்துக்கும் சம்பந்தமில்லை. பூரியிலே ஜகன்னாதரின் முன்னிலையில் ஆண் பெண் குழந்தை அடங்கலுமுள்ள ஜனங்கள் உடம்பில் சதையின்றி எலும்புக்கூடுமட்டுமே தாங்கியலையும் ஏழைகளை நோக்கின், எனக்குப் பயங்கரமாயிருக்கிறது. ஆகவே, என்னால் முடியுமாயின், பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும், இதர எல்லா வேலைகளையும் அடியோடு நிறுத்தி, நூலிழைப்பதையே போதித்துப் பிரபலஞ் செய்யவும் முயலுவேன். பாடசாலைச்சிறுவர் சிறுமியரை நூலிழைக்கும் ஆசிரியர்களாக ஆக்குவேன்; ஒவ்வொரு தச்சனும் கைராட்டினமே செய்யவேண்டுமென்று முயலுவேன்; உயிரூட்டும்படியான கைராட்டினத்தை ஒவ்வொரு வீட்டிலும் பரப்பும்படி பாடு படுவேன். இன்னும் என்னாலாகுமாயின், இந்தியாவிலிருந்து ஓர் அவுன்ஸ் பருத்தி கூட ஏற்றுமதியாகாமல் தடுத்து,

அது எல்லாவற்றையும் நூலாகும்படி செய்வேன்; நூலைச் சேகரித்து, நெசவுகாரருக்குக் கொடுக்கும் வண்ணம், தேசத்திலே ஆங்காங்கு பண்டசாலைகளை ஏற்படுத்துவேன். நிதானமும் பயிற்சியும், பொருந்திய உழைப்பாளிகள் கிடைப்பின், இந்த வருஷத்திலேயே வறுமைப் பிணியை தேசத்திலிருந்து தொலைத்து விட முயலுவேன்; இதற்கு மனிதனுடைய போக்கும் நடையும் மாறவேண்டும். அரசியல் திருத்தமும் பிறவும் மதியைமயக்கும் அபிமானமெனவே மதித்துளேன். வரவரப் படுமோசமாக ஆகிவரும் நிலையைப்போக்குவதற்கு ஏற்ற வழியைக் கண்டு பிடிப்பதற்குப் பல தலைமுறை காத்திருக்கமுடியாது. கூடியசீக்கிரம் நாம் விழித்துக் கொள்ளாமற் போயின், நாம் அழிந்துபோய் விடுவோம். ஒரிஸ்ஸா மாகாணத்துக் குக்கிராமங்களுக்குச் சென்று பார்த்தால், ஜனங்களின் பரமபரிதாப நிலைமைபுலப்படும். அப்பொழுது ஒரு கந்தையாவது அன்னிய ஆடையாகத்தரித்தல் இந்திய ஜனசமூகத்துக்குப் பாவமிழைப்பதாகு மென்பது தெரியவரும்.

இந்தியர் விழித்தெழுந்து, பசிப்பிணியிலிருந்து விடுதலைபெற நிச்சயங்கொண்டு முன்வருவரென்ற நம்பிக்கையுண்டு. ஆதலினால் தான், பசியினால் தற்கொலைசெய்து கொள்ளாமல் உயிர் வாழ்ந்து வருகிறேன். இத்தகைய சீர்கேடான நிலை யிருப்பினும், நம்பிக்கையிராமற் போனால், உயிர்வாழ்வதில் எனக்கு சிரத்தை யிராது. என்னைக் கேள்விகேட்டவரும் சரி, தேசாபிமானமுள்ள

புத்திசாலிகளும் சரி, ஒவ்வொரு வீட்டிலும் நூலி ழைப்பதைப் பிரபலப்படுத்தி, அதில் லாபம் உண்டாகும் படியாக அன்னிய ஆடைவிலக்கை இவ்வருடத்திலே யே நிலைநிறுத்தி வைக்கும் படியான தேச சேவகத்தில் ஈடுபடுவார்களாக.

இனி, நூலிழைப்பதைப் பற்றி ஒரு வார்த்தை. இந்தியாவின் ஏழ்மையை யகற்ற நூலிழைப்பதே அவ சிய மென்று சொல்லியுள்ளேன். நூலிழைப்பதைப் பிர பலப்படுத்த முயலுகையில், நடுவே பல பல கஷ் டங்கள் தோன்றுவது இயல்பு. மிகவும் கஷ்டமானது யாதெனில், தக்க ராட்டினம் கிடைப்பதுதான். பஞ்சாபி லே இன்னும் அத்தொழில் உயிருடன் உளது. ஆதலின் தக்க ராட்டினங் கிடைப்பதில் அங்கே கஷ்டமில்லை. இதர இடங்களில் கஷ்டந்தான். ராட்டினஞ் செய்யும் வழியைத் தச்சர் மறந்துவிட்டனர். ஆதலின் நூலிழைப் போர் சிரமப்படுகின்றனர். எனவே, ராட்டினஞ் செய் யும் வழியில் பரிச்சயமும், அதைச் சுற்றும் வழியும் உழைப்பாளிக்குத் தெரியவேண்டும்; ராட்டினங்களைப் பரீட்சை பார்க்கவேண்டிய சில உபாயங்களைச் சொல் லுகிறேன். இதன் படியிராத ராட்டினங்களை ஏற்றுக் கொள்ளக்கூடாது.

1. சுலபமாகவும் தாராளமாகவும் சத்த மின்றியும் ராட்டினம் சுழலவேண்டும்.

2. கைப் பிடியானது இரிசுடன் நன்கு இணைக்கப் பட்டிருக்கவேண்டும்,

3. ராட்டினத்தின் இரு பக்கத்திலுமுள்ள ஸ்தம்பங்கள் நன்கு சந்திக்கப்பட்டிருக்க வேண்டும்.

4. ஊசியானது சத்தமின்றியும், தோல் பிடிப்பில் சிக்கிக் கொள்ளாமலும் சுழலும்பொழுது "கிர்" என்ற சத்த மில்லாதிருக்க வேண்டும்; அதற்குப் பஞ்சாபில் போட்டிருப்பதைப் போல் முறுக்கின பழுதையோ, கெட்டியான தோலோ அவசியம்.

5. ஒரே சீராக நல்ல முறுக்குடன் 6-ம் நம்பர் 2½ராத்தல் நூல் ஒரு மணியில் இழைக்கும்படி யிருந்தால் தான், ராட்டினம் சரிவர செய்யப்பட்டிருப்பதாகும்.

மூன்று மாதம் அனுபவமுள்ள ஒரு சிறுவன் 35 நிமிஷத்திலே மேற்கண்ட ரகத்தில் இரண்டரை தோலா நூல் இழைப்பதை நான் அறிவேன். மேலே சொல்லியபடி ஒரு மணி நேரம் வேலை செய்து பரீட்சை பார்த்துத் திருப்தி யுண்டானபின்பு தான், ராட்டினத்தை வாங்கவேண்டும்.

## 22 கைராட்டினம்.

[கைராட்டினத்தைப் பற்றி பார்தோலி நகரிலிருந்து ஸர் டேனியல் ஹாமில்டன் என்பவருக்கு 1922-ம்௵ பிப்ரவரிமீ 15-ந்தேதி மகாத்மா காந்தி எழுதிய கடிதம் வருமாறு:—]

தாங்கள் என்னுடன் ஒருமணி நேரம் சல்லாபம் செய்ய விரும்புவதாகவும், நான் அதற்கு இணங்க வேண்டு மென்பதாகவும், மிஸ்டர் ஹாட்ஜ் என்பவர் எனக்கு எழுதியிருக்கிறார். கைராட்டினத்தை தவிர வேறு என் முயற்சி எதைப்பற்றியும் பேசி தங்களது காலத்தை வீணுக்கேன். கைராட்டினந்தான் மிக்க நிரந்தர முள்ளதென்பதும், அதுவே பெரும்பயன் தரத் தக்கதென்பதும் என் நம்பிக்கை. லட்சோபலட்சக்கணக் கான இந்தியக் குடும்பங்களின் பணக் கஷ்டத்தைப் போக்கவல்லது கைராட்டினமே. தவிர, பஞ்சம் வராமற் பாதுகாக்கவும் அது தக்க சாதனமாகும். இதற்கு மிக்க ஆதாரம் உளது. டாக்டர் பிரபில சந்திர ரே என்ற சிறந்த ரஸாயன சாஸ்திரியைத் தங்களுக் குத் தெரியுமானாலும் கைராட்டின விஷயத்திலே அவருக்கு மிக்க உற்சாகம் உண்டென்பதைத் தாங்கள் ஒரு சமயம் அறியாதிருக்கலாம். இந்தியா தேசம் 1900 மைல் நீளமும், 1500 மைல் அகலமும் கொண்ட விஸ்தீரணம் உள்ளது. இவ்விசாலமான பரப்பிலே ஏழுரை லக்ஷம் கிராமங்கள் உள. ஜனங்களுக்கு விவசாயந்தான் கதி. அவர்களிற் பெரும்பாலோர், அன்றுடம் கஞ்சி காய்ச்சிக்குடிப்பவர்கள். தேசமெங்கும் சுற்றிப்பார்த்திருக்கிறேன். இப்பழக்கத்தைக் கொண்டு நோக்குமளவில், தேசத்திலே கோரமான வறுமைப் பிணி வளர்ந்து வருகிறதென்பதில் தடையில்லை. வருஷத்திலே 4-மாத காலம் யாதொருவேலையும் வகையு

மின்றி லட்சக்கணக்கான ஜனங்கள் சோம்பிக் கிடக்கின் றனரென்பது நிச்சயம். இந்திய விவசாயிக்கு ஓர் துணைத் தொழில் தேவை. மிகவும் இயற்கையான துணைத்தொழில் கை நூலிழைத்தலேயாம்; கைத்தறி யன்று. கைத்தறியை ஒவ்வொரு வீட்டிலும் பரவச் செய்ய முடியாது; கை ராட்டினத்தையே ஒவ்வொரு வீட்டிலும் பரப்பமுடியும். ஒரு நூற்றாண்டுக்கு முன் வரையில் அப்படித்தான் இருந்து வந்தது. பணக்கஷ்டத் தினால் ராட்டினம் மறையவில்லை. அடி பிடி கட்டாயத் தின்மேல் அதை மறையச்செய்து விட்டனர். நம்பத்தக்க ஆதாரங்களுடன் அதை நிரூபிக்கமுடியும்.

கைராட்டினத்தைப் பரப்பிவிட்டால், செல்வச் சீர் கேட்டை ஒரே முயற்சியில் போக்கிவிடலாம். இந்தியா வின்மேல் தங்களுக்கு அபிமானம் உண்டென்பதையும், என் தேசத்தின் செல்வ நிலையும் சன்மார்க்கநிலையும் உயரவேண்டு மென்றும் தங்களுக்கு மிக்க சிரத்தை யுண்டென்பதையும் நான் அறிவேன். தங்களுக்கு மிக்க செல்வாக்கு உண்டென்பது எனக்குத்தெரியும். தங்களுக்குள்ள செல்வாக்கை இக்கைராட்டினத்தால் தாங்கள் காட்டவேண்டுமென்று நான் விரும்புகிறேன். பலன் தரத்தக்க கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்த இக் கைராட்டினம் தக்க சக்தியாகும். லட்சக்கணக்கான ஜனங்கள் கூட்டுறவு இல்லாமற் போனால், கைராட்டின முயற்சி சித்தியாகாது. மானக்கேடாக வாழ்ந்து வந்த பல ஸ்திரீகளை நல்வழிப்படுத்துவதில் கை ராட்டினம்

ஏற்கெனவே பயன்பட்டிருக்கிறது. செல்வ நிலைமையைச் சீராக்க அது எப்படி உபாயமாகிறதோ அதுவே போல் சன்மார்க்கம் உண்டாக்கவும் அது உபாயமாகும்.

யந்திரங்கள் விஷயமாய் எனக்குள்ள விரோத கருத்துக்களைக்கேட்டு நீங்கள் மனம் வேறு படமாட்டீர்களென நினைக்கிறேன். யந்திர சாதனங்களின் மூலம் இந்தியாவிலே இதரத் தொழில்கள் விருத்தியாவதில் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால் இந்தியாவுக்கு வேண்டிய துணிகளை இந்தியாவுக்கு வெளிப்புறத்திலோ உட்புறத்திலோ பிரம்மாண்டமான மில்லுகளைக் கொண்டு தயாரிப்பதென்பது செல்வநிலை சம்பந்தமான மிகப் பெரும் பிழையாகும். ஒவ்வொரு வீட்டிலும் உள்ள அடுப்பைத் தொலைத்து, முக்கிய இடங்களிலே கிளப்பை வைத்து மலிவாக அன்னமளிப்பதென்பது பெரும் பிழையல்லவா ?

## 23. மாதிரி தேசவுப் பாடசாலை.

ஸத்தியாக்கிரக ஆசிரமத்திலே சுதேசியம் சம்பந்தமாயுள்ள வெளிப்படையான வேலைகளெல்லாம் கூர்ஜ்ஜர மாகாண கமிட்டியால் நடத்தப்பட்டு வருகின்றன. ஆதலின், கொட்டை யெடுக்கும் ராட்டினங்கள், கைராட்டினங்கள், கைத்தறிகள், காதித்துணி முதலியவை

களைப் பற்றித் தகவல் வேண்டுவோர் அக்கமிட்டியின் காரியிலாகாவுக்கு எழுதித்தெரிந்து கொள்வார்களாக. இப்பொழுது ஆசிரமத்தில் நெசவுபாடசாலை யொன்று தான் நடந்து வருகிறது. பஞ்சிலிருந்து கொட்டை யெடுப்பது முதல் நெசவு வரையில் எல்லா வேலையும் அப்பாடசாலையில் போதிக்கப்படுகிறது. வெளியிலிருந்து வந்து சேரவிரும்பும் பையன்களைச் சேர்த்துக்கொள்ள இடமில்லை. வெளியிலுள்ள மாணவருக்கு யோசனை தெரியவேண்டியும், நூலிழைக்கும் வகுப்புகள் வைக்க விரும்பும் பாடசாலைகளுக்கு விஷயந்தெரியவும், ஆசிரமப் பள்ளிக்கூடத்தின் வேலை விவரத்தைக் கீழே சொல்லுவோம்.

பாடசாலையிலே 49 ராட்டினங்கள் உள; ஒவ்வொன்றிலும் வேலை கிரமமாக நடந்து வருகிறது. நூலிழைப்பதைக் கற்றுக் கொடுப்பதாகத் தனியே 25 ராட்டினங்களும் இருக்கின்றன. எல்லா ராட்டினங்களும் நாளொன்றுக்கு 3-மணி முதல் 6-மணி நேரம் ஓடுகின்றன. சில ராட்டினங்களோ 7 அல்லது 8-மணி நேரமும் சுழலும். ஒரு மாதம் பயிற்சி பெற்றதும், ஒரு நண்பர் நாள்தோறும் 12 முதல் 14-மணி நேரம் பல நாள் வேலை செய்து ஒரு நாளைக்கு மூன்று அணு சம்பாதிக்க முடியுமென்று நிரூபித்தார். ஒரு சகோதரி தனக்குரிய வீட்டு வேலைகளை மேற்பார்வை பார்த்த பின்பு, நாள் தோறும் 9 அல்லது 10 மணி நேரம் நூலிழைத்தாள். ஒன்றரை வாரத்திலே தனக்குரிய

ஆடைகளுக்கு வேண்டிய நூலை நூற்று, அதனால் ஆகிய ஆடையே தரிக்கலானாள். இப்போது ஒரு நாளைக்கு 8 மணி நேரம் நூற்கிறாள். ஒருநாள் அந்த ராட்டினத்திலே ஒரு கோளாறு உண்டாய்விட்டது. எனக்குச் சொன்னதும் அதைப் பார்த்தேன். ஆயினும் அவளுக்குத் திருப்தியில்லை. மறுபடியும்கோளாறு நீக்கப் பட்டது. மீண்டும் அதில் கோளாறு தோன்றியது. என்ன காரணத்தினால் என்று அவளுக்குத்தோன்ற வில்லை. உடனே ராட்டினத்தை நன்கு பரிசீலனை செய்து சரிப்படுத்தினேன். இப்போது அது சரியாக ஓடுகிறது. சகோதரிக்கும் சந்தோஷம் பிறந்தது. நூலிழைக்கும் வீட்டிலுள்ள எல்லா ராட்டினங்களும் நல்ல ஒழுங்கில் இருக்குமானால், நூலிழைப்போர்கள் சலியாமல் சந்தோஷமாகவும் வேகமாகவும் வேலை செய்வார்கள்.

நூலிழைக்கும் வகுப்பிலே 5 ஸ்திரீகள் உளர். அவர்கள் நாளொன்றுக்கு 5 அல்லது 6 மணிநேரம் நூலிழைக்கின்றனர். பள்ளிக்கூடத்திலேஇருக்கும் 23 பேர்களில் 18 பேர் பையன்கள்; ஐவர் பெண்கள். இவர்களும் அவ்வாறே நூலிழைக்கிறார்கள். அவ்வகுப்பை நடத்துதல் சுலபமான வேலையன்று. எப்போதும் அவர்களுக்கு உற்சாகம் ஊட்டவேண்டியிருக்கிறது. சிலர் வேகமாக இழைக்கின்றனர். சில சமயம் அவர்களுக்குத் தலைவலி வந்து விடுகிறது. இன்னும் சில சமயங்களிலோ மகத்தான சோம்பல் தோன்றி விடுகிறது. ஒரு

சமயம் கைவலிக்கிறது. ஒரு சமயம் ராட்டினம் பழுதாகிவிடுகிறது.

முன்ன மிருந்த கெட்டி ஊசியை விடுத்து இப்போது மெல்லிய ஊசி போட்டுவருகிறோம். கொஞ்சம் தவறிவிட்டாலும் மெல்லிய ஊசி வளைந்து உழலுகிறது. ராட்டினம் மிருதுவாகவும் சுலபமாகவும் ஓடுகிறது. சுழலும் வேகமும் அதிகம். ஒரு முறை சக்கரம் சுழலுமானால் கெட்டி ஊசி 50 முறையே சுழல, மெல்லிய ஊசியோ 100 முறை சுழலுகிறது. சுழற்சி இருமடங்காயிருப்பதால், நூலும் இருமடங்காகிவிடவில்லை. ஆனால் முன்னையிலும் அதிக அளவு நூல் கிடைக்கிறது. கெட்டி ஊசி போட்டால் ஒரு மார் அளவு நீளம் நூல்நூற்பதற்குள் சக்கரம் 8 அல்லது 10 முறை சுழலவேண்டும். மெல்லிய ஊசி போட்டால், 4 அல்லது 5 முறை சுற்றினால் போதும். எனவே மெல்லிய ஊசியினால் பலனுண்டு. கையினால் நூலிழைக்கும் வேகமோ ஒரு வரம்புக்கு உள்ளடங்கியது. எனவே 100 முறை ஊசி சுழலுவதைவிட 200 அல்லது 300 முறை சுழன்றால், நூலிழைப்பதின் அளவும் இருமடங்கு மும்மடங்காகு மென்பதில்லை. நல்ல பயிற்சி பெற்ற மாணவர்கள் 5 வினாடியிலே 2 அல்லது $2\frac{1}{2}$ அடி நீளம் நூலிழைத்துச் சுற்றிவிடுகின்றனர். அதாவது ஒரு நிமிஷத்துக்கு 8 அல்லது 10 கஜம் நூலாகும்.

பட்டை போட்ட பஞ்சு நல்லதாக இருந்து மாணவனும் நூலிழைப்பதில் மும்மரமாயிருப்பின்,

நூல் அவ்வளவாக அறுவதில்லை. நூல் அறுவதி லும் அதை இணைப்பதிலும் கொஞ்சம் நேரமாயினும், சில மாணவர் பாவுக்கு உபயோகமாகும்படி 12-ம் நம் பரில் 400 அல்லது 500 கஜம் நூல் நூற்று விடு வர். யந்திரசாலையிலுள்ள நூலிழைக்கும் ஊசியிலும் இவ்வளவு வேலைதான் ஆகும். இது திருப்திகரமானது தான். வேலை முடிந்ததும், ஊசியை ராட்டினத்தி லிருந்து கழற்றி ஜாக்கிரதையாக வைக்கிறார்கள். எனி னும் கேடு நேருவதுண்டு. ஆதலின் இப்படி கேடுண்ட ஊசியை பழுது பார்க்க ஆசிரியருக்குத் தெரிய வேண் டும். ராட்டினத்தில் கோளாறு இருப்பின் அதைச் சரிபண்ணவும் ஆசிரியருக்கு வழி தெரியவேண்டும். ஊசியைச் சுழற்றுகிற மாலையின் கயிறோ அடிக்கடி அறுந்து போகும். அது நல்ல முறுக்குள்ளதாகவும், மெழுகினால் துடைத்ததாகவும் இருப்பின், பலநாள் அறாமல் கெட்டியாக இருக்கும்.

எஞ்ஜினீரிங் கலாசாலையைவிட்டு வந்த மாணவர் களை நூலிழைக்கும் தொழிலில் இறங்கும்படி ஒரு பிர பல தலைவர் தூண்டினார். தூண்டியதும், ஆங்கிலக் கல்வி யானது நம் வாலிபரின் யோக்கியதையையும் திறமையை யும் போக்கிவிட்டதென வருந்திக்கூறினார். இதுதான் உள்ள விஷயம். ஆங்கிலக் கல்வியினால், நமது கையும் காலும் சக்தியற்றுப்போனதோடு, நம்முடைய பொறு மையும் விடாமுயற்சியும் மங்கிப்போய்விட்டன. தப்பா யிருப்பதைச் சரிப்படுத்த நமக்குப் பொறுமை யிருப்ப

தில்லை. நூலிழைப்பதில் என்ன புத்தி வந்துவிடப் போகிறதென்றும், நமதிடமிருந்து ஏழ்மையைத் தொலைக்க முடியுமாவென்றும் பத்திரிகாசிரியர்கள் கேட்கின்றனர். அவர்கள் நூலிழைத்துப் பார்த்தாலும், நூலிழைப்பதில் பையன்களுக்கு ஏற்படும் லாபத்தைக் கவனிப்பினும், அவர்களுடைய சந்தேகம் நீங்கும். ஆனால் அவர்களோ ஆங்கிலக் கல்வியில் மூழ்த்தவர்கள்; ஆகவே அவர்களுக்கு எப்படிப் பொறுமை யிருக்கும்? பையன்களுக்கு உண்மையில் போதனை கிடைக்கிறதா என்றறிய விரும்பின், அதற்குக் கைராட்டினமே தக்க சாதனம்.

நூலிழைப்பதில் பொருளாதாரலாபம் என்ன உண்டு என்று இன்னும் பலர் சந்தேகப்படுகின்றனர். நாம் இதுவரையில் நடத்திவந்த பரிசீலனையின் பலனைப் பார்ப்பின், அவர்களுடைய ஐயம் அகலலாம். சில புள்ளி விவரங்களை இங்கே சொல்லுகிறேன்.

எங்களுடைய மாணவரிலே ஐவர் விளையாட்டுக் குழந்தைகள். ஆசை யிருந்தால்தான் நூற்பர். ஆனால் எல்லாரும் பாவுக்கு ஏற்ற நூல் இழைப்பர். 10-ம் நம்பருக்குக் குறைவாக யாரும் நூற்பதில்லை. பலர் 15-ம் நம்பரும் இழைக்கின்றனர். இப்போது பையன்கள் நூலிழைக்கும் நேரம் நாள்தோறும் 4-மணி. முன்னம் 6-மணி நேரம். அப்போது நடுவில் கொஞ்சம் சோம்பல்வரும். ஆயிரம் கஜம் நூலிழைத்தவுடனே, நூலிழைக்கும் வகுப்பைவிட்டு, பஞ்சைப்பட்டைபோடும் வகுப்பிற்குப் போய்விடலாமென்று விதித்திருக்கிறோம்.

இதனால் நல்ல பலனுண்டு. எல்லாரும் தங்கள் சாமர்த்தியத்திற்குத் தக்கவாறு 2 முதல் 4-மணி நேரத்தில் ஆயிரம் கஜம் நூல் இழைத்துவிடுகிறார்கள். நூலோ ஒரே சீராய் உளது. நல்ல முறுக்கு உள்ளது. பாவுக்கும் தகுதியானது.

சக்கரத்தின் இரிசிலே படியின் அருகில் 4 அடி சுற்றளவுள்ள திருகுபட்டமொன்று அமைத்துளோம். கண்டையிலிருந்து நூலைச்சிப்பமாக்க அது உபயோகமாகிறது. 750 முறை அப்பட்டம் சுழலின், ஆயிரம் கஜம் நூலாய்விட்டதென்று தெரியும். சுற்றும் பொழுதே அச்சுழற்சியைப் பலர் எண்ணிவருகின்றனர். ஆகவே கணக்கிடக் காலமாவதில்லை. நூலைச்சுற்றிய பின்பு கணக்கிடுகின்றனர்.

ஆயிரம் கஜம் 6-ம் நம்பர் நூல் 8 தோலா எடையுள்ளது. (840 கஜம் ஒரு குஞ்சமாகிறது. அப்படி 6 குஞ்சம் ஒரு ராத்தல் எடையானால், நூல் 6-ம் நம்பராகும். எனவே 840 கஜம் நீளமுள்ள 6-ம் நம்பர் நூல் 6-2/3 தோலா ஆகும்.) 6-ம் நம்பர் நூல் ஒரு ராத்தல் நூற்க நாலணா சரியானகூலி. அதாவது 8 தோலா நூலிழைக்க 9-1/2 தம்படி கூலி. ஆனால் எங்கள் மாணவரிலேபலர் 12 முதல் 15-ம் நம்பரும் அதற்குமேற்பட்ட நம்பரும் நூற்கின்றனர். அந்நூல் நேர்த்தியாகவும் நெசவுக்குத் தகுதியாகவும் உளது. நேர்த்தியான ஆயிரம் கஜம் நூலுக்கு அதிகக்கூலியாகும். நூல் எவ்வளவுக் கெவ்வளவு நேர்த்தியாக வேண்டுமோ அவ்வளவுக்

கவ்வளவு முறுக்கேற வேண்டும். 6-ம் நம்பர் நூலுக்கு எவ்வளவு முறுக்கு வேண்டுமோ அதைவிட அரைப்பங்கு அதிக முறுக்கு 12 ம் நம்பர் நூலுக்குத் தேவை. எனவே ஆயிரம்கஜம் 6-ம் நம்பர் நூலுக்கு எவ்வளவு கூலியோ அதை விட அரை மடங்கு அதிக மான கூலி 12 ம் நம்பருக்குக் கொடுக்க வேண்டும். இப்படி அதிகக் கூலி கொடுப்பதாயின், மில் நூலை விடக் கை நூலின் விலை அதிகமாகிவிடும். 12 ம் நம்பர், 16 ம் நம்பர் நூலிழைக்க முறையே 8 அணு, 12 அணு கூலி யென வைத்துக் கொள்ளின், ஆயிரம் கஜம் நூலி ழைக்க 10 அல்லது 11 தம்படி ஆகும். இரண்டு மணி நேரத்திலே அவ்வளவு நூலை ஒரு பையன் நூற்கிறான், சிலர் 3 மணியில் நூற்கின்றனர்; மீதியுள் ளோர் நான்கு மணியில் நூற்கின்றனர்.

ஒரு குறிப்பிட்ட காலத்திலே $17\frac{1}{2}$ நாள் பாட சாலை நடந்தது. 23 பெயரிலே 22 பெயர் சராசரி நாள் தோறும் வந்தனர். $17\frac{1}{2}$ நாளிலே 22 மாணவரு மாக 14 ம் நம்பர் நூலிலே $24\frac{1}{2}$ சேர் நூற்றனர். ஒரு சேருக்குப் பத்து அணு கூலி யென்று வைத்துக் கொள் ளின், அந் நூல் ரூ. 15—4—0 ஆகும். ஒரு மாண வனல் 12 தினத்தில் 18 பவுன் பஞ்சு பட்டை போட்டதற்குக் கொடுத்த ரூ 1—11—0 ஆகிற தொகை ஷை தொகையில் சேர வில்லை; மேலும் தினந் தோறும் 1000 கஜம் நூலிழைத்து விட்டு நாடாவும் கம் பளமும் நெய்வதற்கு நூலை ஒழுங்குபடுத்தின வேலைக்

குள்ள கூலியும் அதில் சேரவில்லை. முறைப்படி வேலை செய்ய மாணவர் பழக்கப்படின், தொகை அதிகமாகும். வேலைக்குக் கிடைக்கும் ஊதியம் எப்படி யிருப்பினும் சரி, முறைப்படி வேலை செய்வதென்ற பழக்கத்திற்கு விலையுண்டா என்ன? நூல் நூற்கும் இலாகாவைப் பற்றி இவ்வளவு இனி, நெசவு இலாகா வைப்பற்றி ஒரு முறை கவனிப்போம்.

## 24. நூலிழைக்கும் இலாகா.

நெசவைப்பற்றிக் கூறுமுன், நூலிழைக்கும் இலாகாவைப் பற்றி இன்னும் சில விஷயங்களைச் சொல்ல வேண்டும்.

ஆஷாட மாதத்திலே மாணவர் முன்னமிருந்ததை விடச் சுறுசுறுப்பாய் இருந்தனர். கிரமமாய்ப் பாடசாலைக்கு வந்தவரின் தொகை 21; மாதத்திலே 6 நாள் விடுமுறை யாகிவிட்டதால் 23 தினத்திலே 30 ராத்தல் 24 தோலா நூல்நூற்றனர். அது சுமார் 12-ம் நம்பராக இருக்கும். பாவுக்கும் ஏற்றது. ஒரு ராத்தல் 10 அணு வீதம் அந்நூலுக்கு ரூ. 19—2—0 ஆகும். நூல் நூற்ற மொத்த நேரம் 1337 மணி.

மாணவரிலே சிலர் சோம்பியுளர் என்ற புகார் தீர்ந்துவிட்டது. தலைவலி வரின் வாசிக்கவும் கணக்குப் போடவும் முடியாதே யொழிய, நூலிழைக்கலா மென்று

மாணவருக்கு இப்போது தெரிந்து விட்டது. நீர் தூக்கியதாலோ, நீந்தியதாலோ, கைகள் களைத்துப் போயின் அக்களைப்பைப் போக்க நூலிழைப்பதே தக்க சாதனமென்றும் இப்போது அவர்களுக்குத் தெரிந்து விட்டது. நூலிழைப்பதில் தேர்ந்துவிட்ட மாணவர்கள் பஞ்சைப் பட்டைபோடுவதிலும் இதர துறைகளிலும் உழைத்து வருகின்றனர். நாள் முழுதும் நூல்நூற்க முடிந்திருந்தால் இன்னும் அதிகமாக நூற்றிருக்கலாம்.

நூலிழைக்கும் சக்தி மாணவரிடம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. ஸத்தியாக்கிரகவாரத்திலே ஒரு மணிக்கு 7 தோலா நூலிழைத்து வந்த மாணவர்கள் சமர்த்தர்களாய் இருந்தனர். இப்போது வேறு மாணவரோ அவர்களை மிஞ்சிவிட்டார்கள். ஒருநாள் ஒருபெண் 6 மணி நேரத்தில் 9 தோலா நூலிழைத்தாள். அது நல்ல முறுக்கும் ஒரேசீருமுள்ளது. 12-ம் நம்பருமாகும். மேற்கண்ட விகிதப்படி 2 அணா 3 தம்படி கூலியாகிறது. ஆகவே 8-மணி நேரம் வேலை செய்யின், 3 அணா 12-மணிக்கு $4\frac{1}{2}$ அணா, 14-மணிக்கு $5\frac{1}{4}$ அணா. பாடசாலையைப்பற்றின மட்டில், பண வருமானத்தை வற்புறுத்த அவசியமில்லை. விஷயம் யாதெனில், பாடசாலைப் பாடத்திட்டத்திலே நூலிழைப்பதையும் சேர்ப்பின் மிகவும் நல்ல சரீரப்பயிற்சி கிடைக்கிறது. தவிர நூலிழைப்பது மீண்டும் வீட்டுத்தொழிலாகும்.

## 25. மெல்லிய கதிரின் பலன்.

மெல்லிய ஊசி அல்லது கதிரையே ராட்டினத்தில் கையாளுவதென்று நாம் ஏற்பாடு செய்துளோம். அது முதல் பல மெல்லிய ஊசிகளைக் கைவசம் வைத்திருக்கிறோம். ஒரு மாணவனிடம் உள்ள மெல்லிய ஊசி வளைந்துபோயின், உடனே அதைச் சமன்படுத்துவதில்லை. வேறு ஊசிகொடுத்து நூற்கச் செய்துவிடுகிறோம். இப்படிச் செய்வதால் நூலிழைப்பதில் தாமதம் ஏற்படுவதில்லை. பின்னர், வளைந்துபோன எல்லா ஊசிகளையும் சேகரித்துச் சமன் படுத்துவோம்.

ஊசியை உருளச் செய்வதற்காக அதன் மீதுள்ள உருள் சக்கரத்திற்குப் பதிலாக நூல் துணியையே சக்கரம்போல் சுற்றிவிடுவோம். ஊசி வளைந்து கெட்டுப் போகும் சமயத்திலே, அதன்மீது சுற்றியுள்ள நூல் துணி சக்கரம் அறுந்துவிடும். இல்லையானல், ஊசியைச் சமம் செய்கையில், நாங்களே அறுத்து விடுவோம். ஊசியைச்சமன் படுத்திய பின்பு, நூல் சக்கரமொன்றை ஊசியின்மீது அமைக்கவேண்டும். இதற்குத் தயாராகக் கையிருப்பில்பசை வைத்திருப்போம். நல்ல கெட்டியான நூலைக்கொண்டு, ஊசியின் மீது சக்கரம் போல் இறுகக் கட்டிவிடுவோம். இறுகக்கட்டாமற் போனல் ஊசியின் மீதுள்ள மாலை பொன்ற கயிறு ஊசியில் அமிழ்ந்து, நூல் சக்கரத்தை வெட்டிவிடும். வெட்டிவிடின், உடனே ஊசி உருளாமல் நின்றுவிடும்.

நூல் சக்கரத்தை மோட்டா நூலினால் செய்யின், மாலைக்கயிறு சரியாக ஓடாது. ஊசி குதிக்கும், உதறும். இதனால் நூலிழைக்கையிலே நூல் அறுந்துவிடவுங் கூடும்.

ஊசியைத்தாங்கி நிற்கும் தோல் காதுகளும் கைவசம் இருக்கும். அதிகமாக எண்ணெய் ஊற்றுவதனாலோ சரியாகக் கையாளாததனாலோ, அக்காதுகள் தளர்ந்து விடின், உடனே வேறு காதுகள் போடவேண்டும். இப்போது நாங்கள் பதனிட்டதோல், அல்லது மூங்கிலினால் காதுகள் செய்யாமல், பதனிடாத தோல்களினால் செய்கிறோம். இதனால் அவை நெடுநாள் உபயோகத்திலிருக்கின்றன.

மாலைக் கயிற்றை அவ்வப்போது வழவழப்பாக்க மெழுகு வைத்திருப்போம். தவிர, சிறிய எண்ணெய் டப்பி, பேனாக்கத்தி, சுத்தி முதலியனவும் கைவசம் வைத்திருப்போம். குஞ்சம் அல்லது சிப்பத்தைக் கெட்டியாக முறுக்கி ஒரு குச்சிபோல் மாணவர் வைத்திருப்பர். சிப்பம் 2 தோலா எடையிருக்கும். ஒரு மாணவனுக்குக் கொடுக்கும் பட்டைபோட்ட பஞ்சின் எடையும் அவ்வளவே. சிப்பம் பெரியதாக இருப்பின், அதைப் பிரிக்கும் பொழுது, நூல் கெட்டுவிடும். ஒவ்வொரு மாணவனும் இழைத்த நூல் தனியே வைக்கப்படும். ஓரளவு நீளம் பாவுக்கு ஏற்ற நூலை நூற்கும்வரையில், குறிப்பிட்ட ஒரு நம்பர் நூலையே நூற்கும்படி சொல்லுகிறோம். பிறகு அந்நூலை நெசவு இலாகாவுக்கு அனுப்பி விடுவோம்.

தானிழைத்த நூல் எப்பொழுது நெசவுக்கு அனுப்பப்படும் என்று ஒவ்வொரு மாணவனும் ஆவலா யிருப்பான். 11 வயதுள்ள ஒரு பெண் 3 மாதத்தில் நூற்ற நூலைக் கொண்டு, 42 அங்குல அகலமும் 20 கஜம் நீளமும் கொண்ட ஒரு துணி நெய்யப்பட்டது. இதைக் கொண்டு அப்பெண்ணுக்கு 2 சிற்றுடையும், 2 மேல் தாவணியும், 2 ரவிக்கையும் கிடைத்தன. தானி ழைத்த நூலைக் கொண்டு துணி நெய்து கட்டிக் கொள்ள அப்பெண் ஆசை கொள்வது சகஜந்தானே. வேறு இர ண்டுபெண்கள் தாங்கள் இழைத்த நூலைக் கொண்டு, நெய்துதரவேண்டு மென்று தினம் கேட்கின்றனர்.

நூலிழைக்கும் வகுப்பில் தேறிவிட்டவர்கள் இதர இலாகாக்களுக்கு அனுப்பப்படுவார்கள். நூல் நூற்க இவர்களுக்கு அதிக சாவகாசம் இராது. ஆதலின், அவர்கள் தயாரித்த பாவுக்கான நூலுக்குவேண்டிய உண்டைக்குரிய நூலை விடுமுறைதினங்களில் நூற்பர். நூலிழைக்கும் வகுப்பு ஏற்பட்ட 2-வது மாதத்திலேயே நெய்தல் வகுப்பிலும் சரியான வேலை நடக்கும்.

## 26. கைத்தறிகள்.

நூலிழைப்பதைப்பற்றி முன்னரே விரிவாகச் சொல்லியுள்ளோம். அதற்கு அடுத்தபடியாக, பஞ்சை எப்படிப் பட்டை போடுவது என்று சொல்லவேண்டும்.

எனினும், கைத்தறி வேலையைப்பற்றி பலர் கேட்டிருப்பதால், அதைப்பற்றி ஆராய்வோம்.

கை நூலைக்கொண்டு நெய்ய எந்த வகையான தறி மிக்க உபயோகமாகுமெனப் பலர் வினவுகின்றனர். தானாகவே நெய்யும் தறியைக் குறித்து நமது அபிப்பிராயத்தை யறியச் சிலர் விரும்புகின்றனர். சீக்கிரத்தில் நெய்யும்படியான தறியொன்றைக் கண்டுபிடிக்க வேண்டுமென மற்றுஞ் சிலர் வற்புறுத்துகின்றனர். தாங்கள் கண்டுபிடித்திருக்கும் புதுமாதிரியில் தறி செய்யப் பணவுதவி தேவையென்று சிலர் கேட்கின்றனர்.

கை நூலைக்கொண்டு நெய்வதற்குக் குழித்தறியே சிறந்தது. இதுவே என் திடமான அபிப்பிராயம். குழித்தறியில் வேலை மெதுவாகத்தான் ஆகும். ஆனாலும் எல்லாத் தறிகளைக் காட்டிலும் அத்தறியே நிச்சயமாய்ப் பலன்தரும். புராதனக் கைராட்டினத்தில் மெதுவாகத்தான் வேலை நடக்கும். ஆயினும் இந்தியாவில் விளையும் பஞ்சனைத்தையும் அப்பூர்வீக ராட்டினத்தைக் கொண்டே நூலாக்கிவிட முடியும். அங்ஙனமே கைராட்டினங்களிலும் மில்களிலும் தயாராகும் நூலனைத்தையும் குழித்தறியைக் கொண்டு நெய்து விடலாகும்.

இதற்கு ஆதாரமாகப் புள்ளி விவரங்களை எடுத்துக் காட்ட இது சமயமன்று. குழித்தறியின் அனுகூலத்தை மட்டும் இங்குக்கூறுகிறேன். தொழிற்சாலையிலுஞ் சரி, குடிசைத் தொழிலிலுஞ்சரி, விசைநாடாத்தறி அல்லது பலகைத்தறி இருக்கத்தான்செய்யும். ஆனால் தானாகவே

நெய்யும் தறி அங்ஙனம் இருக்க இயலாது. தானாகவே நெய்யும் தறிகளைக் கையாளுஞ் சாலையிலே அதைக் கொண்டு நடக்கும் வேலையைப் பற்றின புள்ளி விவரங் களைச் சேகரித்து ஆராய்ந்து பார்த்தால் தெரியவரும். புதிதாக நெய்தல் தொழிலை மேற்கொள்ளுவோர் பகட் டான விளம்பரங்களைக் கண்டு மயங்காதிருப்பாராக. அத் தறிகளைக் கையாண்டு கண்டு பிடித்ததாகச் சொல்லும் சில புள்ளி விவரங்களைக்கண்டும் தவறிவிடக் கூடாது. விசைநாடாத் தறி அல்லது பலகைத் தறிகளைப் பலவித மாகச் சமன்செய்து அமைத்துக் கொள்ளவேண்டும். சென்ற மேமாதத்திலே முசபர்ப்புறத்தில் நெய்தொழிற் காக்ஷி நடந்தது. ஸபர்மதி ஆசிரமப் பாடசாலையில் கையாளப்படும் ராட்டினம், தறி இவைகளுடன் சிலர் அக்காட்சிக்குப் போயிருந்தனர். அதில் காட்சிக்காக வந்திருந்த பல பல கைத்தறிகளிலே, ஸபர்மதி பாட சாலைத்தறியே இலேசாகவும் சாமான்யமாகவும் இருப் பதாகப் பொறுக்கி யெடுக்கப்பட்டது.

இத்தறியில் ஆணிகளையும், இணைப்புக்கான சுழல் ஆணிகளையுந் தவிர மற்ற எல்லாம் மரத்தினாலேயே ஆனவை. நூல் பொறுக்கியும் மரத்தினாலானது. நாடாவும் பன்னையும் இங்கேயே செய்யப்பட்டவை. மற்றைத்தறிகளிலோ பெட்டியில் இரும்புக் கம்பிகள் உள; அன்னியதேச நாடாக்களைக்கொண்டன. சென்னை ராஜதானியில் ஆயிரக்கணக்கில் உபயோகத்திலிருக்கும் தறிகளைத்தழுவி நமது தறி செய்யப்பட்டது. பன்னை

யைத்தவிர எல்லா உபகரணங்களும் உள்படத் தறியின் விலை ரூபாய் 45.

மேலேசொல்லிய பிரகாரம் விசைத்தறிகள் இலகுவான விலையிலும் சடுதியிலும் கிடைக்கும் வண்ணம் பொதுநல சிரத்தை வாய்ந்த மனிதர்களோ, கம்பெனிக்காரர்களோ, முன்வரின் நலமாயிருக்கும். இவ்வேலையில் இறங்கக்கருதுவோர் கூர்ஜ்ஜர மாகாணக் காங்கிரஸ் சபையின் காதியிலாகாத் தலைவருக்கு எழுதித் தகவல் தெரிந்து கொள்ளலாம். விசைத்தறியைப் பற்றிச் சொல்லவேண்டுவது இவ்வளவு தான்.

புதிதாக நெய்தல் தொழிலில் இறங்குவோர் பழையமாதிரியான குழித்தறிகளைக் கையாண்டால் நலமாயிருக்கும். கைநூல்களை நெய்யும் பொழுது குழித்தறியில், நூல் அதிகமாக அறுந்து போவதில்லை. இதனால் விசைநாடாத் தறியில் ஆகும் வேலையைவிட குழித்தறியில் அதிக வேலை நடக்கிறது. இது எங்கள் அனுபவம். அகலமான துணி நெய்வதற்கு விசை நாடாத்தறிதான் மிக்க சௌகரியமானது. கைநூல் நல்ல முறுக்குள்ளதாயிருந்தால், பழையதறியைவிட விசை நாடாத்தறியில் வேகமாக நெய்து விடலாம். எனினும் இன்னும் கொஞ்ச நாள் வரையில் நல்ல முறுக்கில்லாத நூல்தான் நமக்குக் கிடைத்து வருமென்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை. ஆதலின், தற்காலத்திற்குப் பழைய குழித்தறியே தக்க கருவியாகும்.

## 27. எம்மாதிரி தறி.

பழைய மாதிரி தறியில் கைந்நூலால் எவ்வளவு துணி நெய்யக் கூடும் என்று அநேகர் கேட்கின்றனர். எங்கள் பள்ளிக்கூட அநுபவத்தில் பார்த்தபடி குழித் தறியை நன்றாய்க்கற்றுக் கொண்ட ஒருவன் மணி 1-க்கு 30 அங்குல அகலமுள்ள 1 கஜம் துணி நெய்கிறான். அகலம் ஏற்றத்தாழ்வுக் கேற்ப நெய்வதற்கு சாவகாசமாகிறது. இத்தறியில் இதைவிட அதிகமாய் இதுவரையில் நெய்ததில்லை. முன்பு மில்நூலை உபயோகப்படுத்தின போது, இதைப்போல் $1\frac{1}{2}$ மடங்கு அதிகமாக துணி நெய்ய முடிந்தது. இருந்தபோதிலும் கைந்நூலாலும் மில் நூலாலும் வேஷ்டி புடவை நெய்வதற்கு விசைத்தறியே சுலபமாயிருக்கிறது. பிறகு கஞ்சி போடவேண்டுமா வேண்டாமா என்ற கேள்வி நிகழ்கிறது. இடசௌகரிய மில்லாதபோது அதை விட்டுவிடுவதே மேல் என எமக்குத் தோன்றுகிறது. ஜனநெருக்கமுள்ள பட்டணத்தில் குடிக்கூலி அதிகமாகவிருக்கும் இடங்களிலுள்ள கைத் தறிச் சாலைகள் நூலுக்குக்கஞ்சி போடவேண்டியது தான். ஆனால் அதே தொழிலாக உள்ளகைக்கோளரைப் போல் நூலை முழுநீளமும் விட்டுக் கஞ்சிபோடுவதில் சாவகாசம் கூடிவருவதுடன் நேர்த்தியாகவு மிருக்கும்.

மற்றொரு காரணம்: ஒரே சமயத்தில் 200 அல்லது 300 கஜம் நூலுக்குக் கஞ்சி போடக்கூடும். கைந்

நூலில் இவ்வுளவு நீளம் கிடைக்கக்கூடுமோயின், புராதன கைக்கோளர் செய்தவண்ணம், ஒரு தடவையிலேயே கஞ்சி போடுதல் எளிதாகிறது.

## 28. கைநூலைப் பாவு போடுதல்.

கை நூலைப் பாவு போடுதல் மிசக்கஷ்டம். ஆகவே கதர் நெசவுத்தொழில் குந்தகப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. கைநூலைக் கொண்டு பாவு போடும் முறை மில்நூலைக் கொண்டு பாவு போடுவது போல்தான். நன்றாக நூலை இழைக்காதது தான் கஷ்டத்திற்குக் காரணம். இக்கஷ்டத்தை நீக்குவதற்குச் சிறந்த வழியாதெனில், கைநூலிழைப்பை ஒழுங்கு படுத்திவிருத்தி செய்வதேயாம். ராட்டினத்தில் இழைத்த நூல் ஒரே சீராகவும் கெட்டியாகவும் இராதென்பது மூடநம்பிக்கை.

தக்க கவனத்துடன் நூற்றால், நூல் நன்றாயிருக்கும்; அதோடு சில அம்சங்களிலே மில் நூலைவிட மேன்மையாகவும் இருக்கும்.

ஆதிகாலந்தொட்டு, பஞ்சாபிலும், மார்வார் பிரதேசத்திலும் ராட்டினத்தில் நூலிழைக்கப்பட்டு வருகிறது. எனினும், அவ்விடங்களிலே இன்னும் நன்றாக நூலிழைக்கவேண்டும். அங்குள்ளோருக்கு நூலிழைக்கத் தெரியாதென்பதில்லை. அவர்களும் சரி, நூலை வாங்கும் வியாபாரிகளும் சரி, நூலின் தரத்தைக் கவனி

யாமல் அசட்டையாய் உளர். ஆதலின், உண்மையில் சுதேசிய சிரத்தையுள்ள ஜனங்கள் அவ்விஷயத்தில் கவனஞ் செலுத்தினாலன்றி நிலைமை திருந்தாது.

நூலிழைப்போரை அவ்வப்போது போய்ப் பார்த்து இன்னவாறு முறுக்கு இருக்கவேண்டு மென்று சொல்லி, நல்ல நூலுக்கு இதுதான் அடையாள மென்று போதிக்கவேண்டும். இப்பொழுது கொடுப் பதைவிட அதிகமாக விலை கொடுத்தால், நூலிழைப்பு நன்றாவதற்கு இதுவும் ஒரு வழியாகும். இன்னவாறு கூலி அல்லது விலை கொடுக்கவேண்டும் என்று எங் களுக்குத் தெரியும்படியான புள்ளி விவரங்களைக்கீழே காட்டியிருக்கிறோம். காலந் தள்ளுவதற்கான செலவு கூர்ஜ்ஜரத்தை விடக் குறைவாயிருக்குமானால், அதற்குத் தக்கவாறு விலையைச் சரிப்படுத்திக் கொள்ளலாம். நூலி ழைப்பு விருத்தியாகும்பொழுது பாவு போடுவதிலுள்ள கஷ்டம் மறைந்துவிடும்.

கைநூலைக்கொண்டு நெய்யமுடியவில்லையென்று நாட்டு நெசவுகாரன் சொல்வானாயின், மில்நூல் நெசவுக்கு உப யோகிக்கும் பன்னையைக் கொண்டு பாவுபோட முடிய வில்லை யென்பது வெளிப்படை. கைநூல் ஒரே சீராக இல்லாதிருப்பதால் பன்னையின் இடைவெளி சற்று அக லமாயிருக்கவேண்டும். பன்னையிலே ஓர் அங்குலத்தில் இத்தனை நம்பர் இழை இத்தனை கொள்ளும் என்ற தகவலும் அப்புள்ளி விவரத்தில் உளது. வேஷ்டி யல்லது புடவையாக இல்லாமல் சட்டைக்குரிய துணி

| நூலின் நம்பர். (ரகம்) | நூலின் தரம். | ஒரு ராத்தலுக்குக் கூலி விகிதம் | ஓர் அங்குல நூலிலே இவ்வளவு புறாக்கு என்ற கணக்கு | கால் + நீளமுள்ள திருவட்டத்திலே இருக்கின்ற மாலை நூல் | பன்னையின் ஓர் அங்குலத்திலே இருக்கின்ற இழை. | பன்னையின் ஓர் அங்குலத்திலே இருக்கின்ற இரட்டை இழை. | ஒரு சதுர கஜம் நெய்வதற்குக் கூலி விகிதம். |
|---|---|---|---|---|---|---|---|
| 6 | பாவு | 0—4—0 | 10 | 96 | 24—28 | 18—22 | 0—4—0 |
| 6 | உண்டை | 0—3—0 | 8 | ” | ” | ” | ” |
| 9 | பாவு | 0—6—0 | 12 | 144 | 26—32 | 20—24 | 0—4—6 |
| 9 | உண்டை | 0—4—6 | 10 | ” | ” | ” | ” |
| 12 | பாவு | 0—10—0 | 14 | 192 | 30—34 | 22—26 | 0—5—0 |
| 12 | உண்டை | 0—8—0 | 12 | ” | ” | ” | ” |
| 16 | பாவு | 0—12—0 | 16 | 256 | 34—38 | 24—28 | 0—5—6 |
| 16 | உண்டை | 0—10—0 | 13 | ” | ” | ” | ” |
| 20 | பாவு | 1—1—0 | 18 | 320 | 40—44 | 28—32 | 0—6—0 |
| 20 | உண்டை | 0—13—0 | 15 | ” | ” | ” | ” |

யையே செய்வதாயின், அதோடு நூலும் நல்லதாக இருக்குமாயின், பன்னையிலே ஓர் அங்குலத்தில் இத்தனை இழை கொள்ளுமென்பதென்ற புள்ளியுடன் இன்னும் இரண்டு அல்லது நான்கு இழைகளைக் கூட்டிக் கொள்ளவேண்டும்.

நூல் கெட்டியாக இல்லாமலும் ஒரே சீரற்றும் இருப்பின், உண்டைக்கும் பாவுக்கும் இரட்டை இழையே போட்டு செய்ய வேண்டும். இதனால் துணி கெட்டியாக இருக்கும். அதோடு நெசவும் சுலபமாக இருக்கும். இம்மாதிரி செய்வதானல் பன்னையிலே ஓர் அங்குலத்தில் இத்தனை இழை கொள்ளும் என்ற தகவலும் அப்புள்ளி விவரத்தில் காணப்படும். இவ்வழியை மேற்கொள்ளின், தேசமெங்கும் குவிந்து கிடக்கும் கை நூலை மிக்க கஷ்டமின்றி நூற்று விடலாம்.

பாவுபோடுவதில் பரம்பரையான முறையை நாம் விருத்தி செய்ய முடியாது. ஆங்காங்குள்ள சீதோஷ்ண நிலை, பருவகாலம், சந்தர்ப்பம் ஆகிய இவைகளுக்கு ஏற்ற வண்ணம், பாவுபோடும் உபகரணங்கள் சேகரிக்கப் படுகின்றன. முக்கியமான தானியம் எதுவோ அதையே கஞ்சிக்கு உபயோகிக்கின்றனர். சோளம் முதலியன மலிவாயிருப்பதால், பல இடங்களிலே அவைகளை உபயோகிக்கின்றனர். மாரிகாலத்திலே கோதுமை மாவைக் கஞ்சிக்குக் கையாளுகின்றனர். ஏனெனில், காற்றிலுள்ள ஈரத்தைச் சமன் செய்வதற்கு அக்கோதுமை பயன்படுகிறது. சென்னையிலே நல்ல நூல்களுக்கு அரிசியையும்,

மோட்டா நூல்களுக்கு ராகி (அதாவது கேழ்வரகு) யையும் கஞ்சிக்கு உபயோகிக்கின்றனர். அரிசியும் கோதுமையுமே கஞ்சிக்கு மிகவும் ஏற்றவை. நல்ல நூலுக்கு 100-க்கு 10-வீதம் எடையும், மோட்டா நூலுக்கு 20-வீதமும் கஞ்சிப் பொருளின் எடையாகும். பாவு போடுவதற்கேற்ற நானுவிதப் பொருளும் அவற்றைத் தயாரிக்கும் முறையும் பின்வருமாறு:—

கோதுமை:—கோதுமைக் கஞ்சி போடும் விஷயம். முதலில் பாவு எவ்வளவு எடை இருக்கிறதென்றறிந்து கொள்ளவேண்டும். அப்பாவின் மென்மைக்கோ, மோட்டாத்தன்மைக்கோ ஏற்றவாறு, பாவின் எடையில் நூற்றுக்கு 10 முதல் 20 வீதம் எடை நேர்த்தியான கோதுமை மாவை எடுத்துக் கொஞ்சம் தண்ணீர் விட்டு இளகின பதத்தில் கூழாக்கவேண்டும். கூழில் கட்டி தட்டக் கூடாது. பாவு நனைந்து அமிழும்படியான அளவு தண்ணீர் ஊற்றி, அதைக் காய்ச்சி, அப்பால் கூழைச்சேர்த்து நன்றாகக் காய்ச்ச வேண்டும். கூழும் பாவும் ஒன்று சேர்ந்து திரளும்வரையில் காய்ச்ச வேண்டும். ஒரு ராத்தல் மாவுக்கு ஓர் அவுன்ஸ் நல்லெண்ணெயைக் கலக்கவேண்டும். இதனால் பாவின் நூல்கள் மிருதுவாகும். ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளக்கூடும். தேங்காய் அல்லது கொட்டைமுத்து எண்ணெயும் உபயோகிக்கலாம். எந்த எண்ணெயும் நல்லது தான். ஆனால் கொட்டை முத்து எண்ணெயை உபயோகிப்பதால் ஒருவிதமான நாற்றம்

உண்டாகும். அதோடு பாவின் நிறம் மங்கலாகவும் இருக்கும். இம்மாதிரி கூழ் தயாரித்தபின் பாவிலே அக்கூழை மெதுவாக ஊற்றவேண்டும். கூழை ஊற்றிக் கொண்டிருக்கும் பொழுதே பாவை இரண்டு கையினு லும் தப்பவேண்டும். பாவுமுழுவதிலும் கூழை ஊற்றித்தப்பிய பின்பு, பாவைத் திறந்த வெளியிலே விரித்து புல்லைக் கொண்டு ஒரே முகமாக அடிக்கடி தேய்க்கவேண்டும். ஒன்ருக உலரும் வரையில், பாவின் அடிப்பாகத்தை மேல்பக்கம் கொண்டுவந்து தேய்க்க வேண்டும். பாவின் நீளத்திற்கு ஏற்ப இருவரோ மூவ ரோ புல்கொண்டு தேய்ப்பார். பலரோ அறுந்துபோன இழைகளைத் திரித்துவருவர்.

பாவு போடுவதில் இதுதான் சரியான முறை. இழையிலே பிசிர் இருக்குமாயின், அது இழையுடன் இழைத்து விடப்படும். புல்லைக்கொண்டு தேய்க்கும் பொழுது பிசிர் அமுங்கி இழையுடன் இழைந்து கொள் ளும். நூலோ கம்பியைப்போல் கெட்டியாகவும் மிருது வாகவும் ஆகும். இதனுல், நெய்ய மிக்க சுலபமாய் இருக்கும். நீண்ட அனுபவம் இருந்தால் தான் அப்படிச் செய்ய முடியும். சுறுசுறுப்புள்ள வாலிபனொருவன் நாள் தோறும் மூன்று மணி நேரம் ஒரு நிபுணரிடம் பழகி வரின், வழி நன்ருகத் தெரிந்து விடும். அப்பால் அவ் வாலிபன் வேறு இருவரின் சகாயங் கொண்டு, நிபுணரின் உதவியின்றிப் பாவு போட்டு விடலாம். சுறு சுறுப்பு அவ்வளவு இல்லாதவர்களுக்கு 4 அல்லது 6 மாதம்

பிடிக்கும். சோளம் முதலியவற்றைக் கொண்டு கூழ் செய்து பாவு தோய்த்தலும் மேற் சொல்லிய படிதான். ஆனால், ஒரு விஷயம். கோதுமைக் கூழைப் போல் அக்கூழ் அவ்வளவு நேர்த்தியாக இராது. ஆதலின் அதிகக்கூழ் பிடிக்கும். கோதுமை மாவை நீர் கலந்து காய்ச்சிக் கூழாக்குமுன் இரண்டுதினம் நீரில் ஊறவைத்திருக்கவேண்டு மென்று சிலர் சொல்லுகின்றனர். இப்படிச் செய்வதனால், அம்மாவின் பசைக் குணம் அதிகரிக்கிறதாம்.

அரிசி :—அரிசிக்கஞ்சி தயாரிக்கும் முறை பின் வருமாறு :—

இது இன்னும் சுலபம். சாதாரணமாக சமைபலுக்கு எவ்வளவு உலைநீர் வைப்போமோ அதைவிட அதிக நீர்கலந்து நன்றாகக் காய்ச்ச வேண்டும். அப்படியே அது 12 முதல் 24 மணிநேரம் இருக்கவேண்டும். பின்பு அதை வடிக்கட்டவேண்டும். அவசியமானால் தண்ணீர் ஊற்றிக் கொள்ளலாம். வடிக்கட்டின கூழை இன்னும் குழம்பாக்கி, அப்பால் வீதாசாரப்படி எண்ணெய் கலக்கவேண்டும்.

பாவுக்கு ஒருவகைக்கெட்டி ஏற்படுவதோடு, நேர்த்தியான மென்மையும் உண்டாவதால், கோதுமையை விட அரிசியையே உபயோகிப்பது முண்டு. பாவுக்காகும் நூல்களைக் குஞ்சத்திலிருந்து கழற்றி எல்லாவற்றையும் ஒன்றோடொன்று இணைக்கவேண்டும். பின்பு, அதை

ஒன்றுசேரமடித்து,மண்ணினாலோ உலோகத்தினாலோ ஆகிய பாண்டத்திலிட்டு, நூல்முழுவதும் அமுங்குமளவு நீர் ஊற்றி, இரண்டு காலாலும் நன்றாகத் துவைக்க வேண்டும். இரண்டு அல்லது மூன்றுதினம் அப்படியே வைத்திருக்கவேண்டும். அக்காலையிலே நாள்தோறும் இருமுறை கல்லிலிட்டு ஒரு குச்சி கொண்டு தட்டவேண்டும். இப்படித் தட்டினாலொழிய நூல் துவையாது. நன்றாகநீரில் ஊறாமற் போனால், கூழைக் கிரகிக்காது; கிரகிக்காமற் போனால், கஞ்சியில் நன்றாகத் துவையாது. கஞ்சியிலே ஒரு வகைப் பிசின் தன்மையுண்டு. மேற் சொல்லியபடி நன்கு ஊறவைத்துக் காய்ச்சினால் தான், பிசின் தன்மை போகும். இம்மாதிரி செய்தாலொழியக் கஞ்சியிலே நன்கு துவைத்துக் கஞ்சியை இழுத்துக் கொள்ளாது.

இரண்டு மூன்று தினங் கழித்து நூல் நன்கு துவைத்து ஊறியதும், ஒரு மூங்கிலின் நிழலில் நூல் குஞ்சங்களைத் தனித்தனி உலர வைக்கவேண்டும். நன்றாக அது உலருமுன், இரண்டு மூன்று முறை அதை எடுத்து உதறினால்தான் நூல் ஒன்றோடொன்று ஒட்டிக் கொள்ளாதிருக்கும். மேற்கண்டவாறு உலருமுன், வடித்த கஞ்சியைச் சென்னை நெசவுகாரர் நூலின் மீது ஊற்றுவர். இதனால் நூல் கெட்டிப் படுவதோடு, நூலைப் பாவு போடும் பொழுதும் சுற்றும் பொழுதும் அதிகமாக அது அறுந்து போவதில்லை.

கஞ்சி தோய்ப்பதில் மற்றொரு முறை யாதெனில், குஞ்சம் அல்லது சிப்பமாகக்கஞ்சி போடுவதாகும். கஞ்சி போட்டுப் புல் கொண்டு தேய்ப்பதைப் போல் அவ்வளவு திறமையாக இல்லாதிருப்பினும், சரியாகக் கஞ்சி போட்டால் பாவாய் விடும். நூலைக்குஞ்சம் குஞ்சமாக எடுத்து, மேற் சொல்லியபடி அரிசி அல்லது கோதுமைக்கஞ்சி யில் நனைத்துப் பதம் பண்ணுவர். இம்மாதிரி தயாரான பாவு நெசவுக்குத் தகுதியாகவிருக்கும். சாதாரணமான பசை கொண்டு அம்மாதிரி பாவு தோய்த்துப் பார்த் தோம். கோடை காலத்திலே சரியாகத் தான் இருக் கிறது. ஆனால் மாரிகாலத்திலோ நூல் ஈரமாக இருக் கும்.

## 29. கைராட்டினம்.

அஸ்ஸாம், கீழ் வங்காளம், முதலிய இடங் களில் காந்தி சுற்றுப் பிரயாணம் செய்தார். அப் போது அவ்விடங்களில் உபயோகித்தவரும் கைராட்டி னங்களைப் பார்த்தார். அவை யாவும் பற்பல விஷயங் களில், குற்றமுள்ளவைகளாகக் காணப்பட்டன வென்று கூறினர். இதே மாதிரிதான் பிற மாகாணங்களும். ஆகையால், சத்தியாக்கிரக ஆச்ரமத்திலுள்ள சக்கரந் தான், சரியான சக்கரமென்று கருதி அதன் உருவப் படமும், அமைப்பும், துணைக்கருவிகளுடன் அதன் உபயோகங்களையும் கீழே கூறுகின்றோம்.

1. குறிப்பிட்ட சக்கரத்தின் கீழ் பின்பாகமானது 1 அடி 9 அங்குலம் நீளம்; 4 அங்குலம் அகலம், 3 அங்குலம் கனமுள்ளது. 2. குறிப்பிட்டுள்ள முன்பக்கத்து அடிப்பாகம், 9 அங்குலம் நீளம்; 4 அங்குலம் அகலம், 3 அங்குலம் உயரம். இவ்விரண்டையும் சேர்க்கும், 3. குறிப்பிட்ட நீண்டதுண்டம் (இருபுறசந்திகளும் சேர்த்து) 3 அடிநீளம். 3 அங்குலம். அகலம், 2 அங்குலம். உயரம்,

பின்புறக் கீழ்கட்டையில் நாட்டப் பட்டிருக்கும் 4. குறிப்பட்ட இரண்டு பெரிய மரத்துண்டங்கள் ஒவ்வொன்றும் சந்தியும் சேர்ந்து. 1 அடி 6 அங்குல நீளம் 2 அங்குல அகலம். 3. அங்குலகனம். இவ்விருஸ்தம்பங்களும், 9 அங்குல இடை விட்டு நாட்டப்பட்டுளது. மேலிருந்து 2 அங்குல தூரத்தில் அத்தம்பங்களில், இரண்டு துளைகளுண்டு. இருசு தங்குதடையின்றி சுழல, மெல்லிய இருப்புத் தகடாலாய உருளை வாய் களிருக்கின்றன. அவ்விரு துளைகளில், அதன் மேற்புறம் திறந்த வெளியாய் விடப்பட்டுளது. அத்துளைகளுக்கு 1 அங்குல உயரத்தில் வெளிப் புறத்தினின்றும் உட்சாய்வான துவாரங்கள் இருக்கின்றன. அதன் மூலமாய் இருப்பு உருளைவாய்களுக்கு, சுலபமா யெண்ணெய் ஊற்றலாம்.

ராட்டினத்தின் முன் பக்கத்தில் 5. குறிப்பிட்ட இரு சிறிய ஸ்தம்பங்களும், சந்திகளுடன் 9 அங்குல நீளம். $1\frac{1}{2}$ அங்குல அகலம். $1\frac{1}{2}$ அங்குல கனம். இவ்விரண்டிலும் மேலிருந்து 4 அங்குலத்தின் கீழ் தோல் காதுகள் நாட்டத் துளைகள் இருக்கின்றன. அத்தோல் காதுகளை

தான் ஊசியை ஏந்துகிறது. இவ்விரு ஸ்தம்பங்களும், 3 அங்குலம் இடைவெளிவிட்டு நிற்கின்றன. இவைகளினிடையே, அதே கனத்தில், கீழ்க் கட்டையிலிருந்து 2 அங்குல உயரத்தில், இவைகளிரண்டையுஞ் சேர்க்கும் குறுக்குச் சட்டமொன்று உண்டு. இச்சட்டத்தில், $\frac{1}{2}$ அங்குல இடை விட்டு நாட்டிய இருகுச்சுகளே, ராட்டினத்துக்கும் ஊசிக்கும் ஓடும் 'மாலே' என்கிற கயிற்றை, அங்கு மிங்குமாக நகராத வண்ணம், நடத்தும் கருவிகள்.

முன் பக்கத்தில் நாட்டியுள்ள சிறிய ஸ்தம்பங்கள் இரண்டினில், இடதுபாகத்தில் 6 குறிப்பிட்ட மற்ருெரு ஸ்தம்பமும், அதனோடு இணைக்கப்பட்டுள்ளது. இப்புதிய ஸ்தம்பத்துள்ளும் ஒரு துளையுண்டு. மெல்லிய ஊசி போடுவதானுல், அதற்கெனத் தேவையாயிருக்கும் தோல் காதைப் பொருத்துதற்கே இத்துளையை அமைத்தது.

வட்டைகள் என்று கூறும் 7. குறிப்பிட்ட 8 சட்டங்கள், ஒவ்வொன்றும், 2 அடி நீளம்; 4 அங்குல அகலம்; $\frac{3}{4}$ அங்குல கனம். வட்டைகளனைத்தும், இரு முனைகளோடு தோன்றும்வண்ணம் இடை வகுக்கப்பட்டிருக்கின்றன. சட்டங்கள் 8-ம் பக்கத்துக்கு 4 ஆகப் பிரித்து அந்நான்கினையும் இரண்டு ஜதைகளாக இணைத்து மத்தியகட்டையின் இருமருங்கிலும் பொருத்தியுள்ளது. 8. குறிப்பிட்ட சக்கரத்தின் மத்திய கட்டை $4\frac{1}{2}$ அங்குல நீளம் 4 அங்குல குறுக்களவு. இதனுள்

நழைத்திருக்கும் இரும்புக்கம்பியே இருசு. அதன் நீளம் 19 அங்குலம்; குறுக்களவு 1½ அங்குலம். பிடிப்பு உறுதியாய் இருப்பதற்காக கைப் பிடியின் சமீபத்தில், இவ்விருசை சதுரவடிவமாக்கியிருக்கிறது. சக்கரம் இலைகளோடு சுழலும்போது, நாட்டப்பட்டுள்ள இருகம்பங்களிலும் உரயாதவாறு இரண்டு மர உருளைகள் 'ஜக்கி' போல், போடப்பட்டுள்ளன. ராட்டினத்தின் கைப்பிடி 1½அடி நீளம்; 2. அங்குலம் அகலம். 2 அங்குல கனம். மரத்தால் செய்தது.

சக்கரத்திற்கும் கைப்பிடிக்கு மிடையே 9, குறிப்பிட்ட பலகை யொன்று 1அங்குலி கனத்தில் 6அங்குல சதுர அடியுள்ளதாய் வைக்கப்பட்டிருக்கிறது. அப்பலகையின் பின்பக்கமாக 6 துண்டுக் கம்பிகள் ஆணியால் தைக்கப்பட்டு, வெளிப்புறமாக நீண்டு, வளைந்து, மொத்தத்தில் 4 அடி சுற்றளவைத் தருகின்றன. இதுவே திரு வட்டமாகும். இதற்கு நேராகக் கீழ் அடிக் கட்டையில், இருப்பு வளையமொன்றிருக்கிறது. நூலைக் கண்டையிலிருந்தே இவ்வட்டத்தில் எடுக்கும்போது, ஒழுங்காக நூலை விடுவதற்கு அமைத்ததிவ்வளையம். ராட்டினத்தின் முன்பக்கத்து ஸ்தம்பங்களில், 3 குறிப்பிட்ட ஸ்தம்பத்தின் போக்கைத் தழுவி, மூங்கிலால் செய்த இரு மெல்லிய ஊசிகள் இருக்கின்றன. நூற் கண்டையை, ஊசியிலிருந்து வெளிப்படுத்திய பிறகு, நூலைத் திருவட்டத்தில் எடுக்கவேண்டுமானால் அதனைப் பிடித்துக் கொள்வதற்காக அவ்விரு மூங்கிலூசிகளும்

அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஊசியிலிருந்தே நேராக நூலை எடுக்கும் போது நூல் முனையைக் கைப்பிடி பக்கமாக இடது கையால் பற்றி ஈர்த்து வலது கையால் ராட்டினத்தைச் சுற்ற வேண்டும்.

10 குறிப்பிட்ட இடமே நூற்பவரதிருப்பிடம்.



வொருவரும், இவ்வரிய நூலை வாசிக்க வேண்டுமென்று நாம் வற்புறுத்துகிறோம். இந்திய அரசியல் விஷயங்கள் யாவும் இந்த ஒரு நூலில் அழகாகத் தொகுத்துக் காட்டியிருப்பது பெரிதும் பாராட்டத்தக்கது. இந்நூலை வெளிப்படுத்திய வருக்குத் தமிழுலகம்பெரிதும் கடமைப் பட்டிருக்கின்றதென்று நாம் கூறுவது மிகையாது. இந்தநூல் உயர்ந்த கடிதத்தில் நன்றாக அச்சிடப்பட்டி ருக்கின்றது. இதன் விலை ரூபாய் 1-8-0.— தேசபக் தன் மதிப்புரை.

## ஒத்துழையாமை ஏன் ?

இப்பொழுது தேசமெங்கும் தெய்வீக ஆவேசத் துடன் வேன்றிவரும் ஒத்துழையாமை இயக்கத்தின் விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாய் ஒரு கோர்வை யாக அறிய விரும்புவோருக்கு உற்றநூல். ஒத்துழை யாமையே சுய ராஜ்ய வாழ்வுக்கும் சுய மதிப்புக்கும் ஒப்பற்ற சாதனம் என்பதும், அதன் உள்ளுறை தத் துவங்கள் இன்ன வென்பது. செம்பாகமான தமிழ் நடை யில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. ஒத்துழை யாமை விஷயமாக "மகாத்மா காந்தி" செய்துள்ள அரிய பிரசங்கங்கள் சிலவும் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை ரூ 0—8—0

## ஒத்துழையாமை
## இதர தேசங்கள் வெற்றி பெற்ற விவரம்

ஒத்துழையாமை என்னும் தெய்வீக இயக்கத்தின் விசேஷத்தை உய்த்துணராத சிலர், இந்த இயக்கத்தை மேற்கொண்டு அதிகாரி வர்க்கக் கோட்டையைத் தகர்த்து சுயராஜ்யக் கொடி நாட்ட முடியுமா வென்று சந்தேகப்படுகின்றனர். அத்தகையோரும்சரி, பிறரும் சரி, அவ் வியக்கத்தின் விசேஷத்தை அறிய வேண்டி,

ஹங்கேரி தேசம் அவ்வியக்கத்தைச் சாதனமாகக் கொண்டு, ஆஸ்டிரியாவின் ஆதிக்கத்தைப் போக்கி, சுயராஜ்ய வாழ்வு பெற்ற விருத்தாந்தமும், ஜப்பானியர் சொல்ல வொண்ணாத கொடுமையியற்றியும் கொரியாவும் குடியரசுக்கொடி நாட்டும் விவரமும், இந்நூலிலே எளிய இனிய தமிழ் நடையில் சிறுவரும் சிறுமியரும் உணருமாறு சுருங்கச் சொல்லி விளங்கக் கூறப்பட்டுள்ளன.

இதன் விலை அணா 0—8—0

## இந்தியாவுக்கு ஸ்வாதீனம்
### அதன் அவசரம்

பரிபூரணமான ஸ்வதந்திரம் உடனே பெற்றாலன்றி பாரத மக்கள் பண்புடன் வாழ முடியாதென்று பரிசுத்த ஆத்துமாவாகும் ஆன்ட்ரூஸ் எழுதியுள்ள வியாசத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு. பிரிட்டிஷ் ஆட்சியினால் இந்திய மகா ஜனங்கள் பரம க்ஷீணதிசை யடையலாயின ரென்று, இதை இங்கியர் உணர்ந்து, ஒத்துழையாமையை மேற்கொள்ளின் பிரிட்டிஷ் ஆட்சியின் அடிப் படை அற்றுப் போகு மென்றும், ஆங்கில மேதாவி ஸீலி முன்னமேயே கூறி இருப்பதை ஆன்ட்ரூஸ் எடுத்துக் காட்டி, சுயராஜ்ய வாழ்வுக்கு ஒப்பற்ற சாதனம் ஒத்துழையாமை தர்மமே யென விளக்கி சொல்லி யிருக்கிறார். ஸ்ரீ பாரத மாதாவின் நவரத்ன மாலை யென்னும் அரிய ஒன்பது பாக்களும் அடங்கி யுள்ளது. இந்நூலின் விலை அணா 0—4—0.

## சிலப்பதிகாரக் கதை.

செந்தமிழ்ப் பெருங்காப்பியம் ஐந்தினுள் ஒன்றாக விளங்கும் சிலப்பதிகாரம் என்னும் பழைய நூல் காவிரிப்பூம் பட்டினத்து வணிகனாகிய "கோவலன்" அவன் மனைவி "கண்ணகி" என்னும் மிவர்கள் சரித்திரத்தை

விரித்துக் கூறும் அழகிய நூலாகும். அரசர் தமது நீதியில் சிறிது தவறினும் உயிர் வாழா ரென்பதையும், கற்புடைய மகளிரை மக்களேயன்றித் தேவரும் முனிவரும் கைதொழுது தேத்துவ ரென்பதையும், முன்னர் செய்த இருவினையும் செய்த முறையே செய்தோனை நாடிவந்து பின்னர் உருக்கொண்டு நின்று நுகர்விக்குமென்பதையும், யாவரு மறிந்துய்யக் கருதி, கதை கூறுமுகத்தானே, இம்மூன்று உண்மைகளும் சிலம்பு காரணமாகப் பெறப்படுதலின் இந்நூற்குச் சிலப்பதிகாரமென்று பெயரிட்டனர். ந. பலராமையர் அவர்கள் இயற்றியது. ரூ. 1—0—0.

## பரத நாட்டின் நிலைமை

பொன்விளையும் பூமியெனவும்; கற்பக நாடெனவும் புகழ்ப்பெற்று பலவகை ஏற்றமும் இயற்கைவளமும் வாய்ந்த நம் நாடு இக்காலத்திலே சீரும் சிறப்புமற்று, பரிகாசத்துக் கிடமாய்விட்டது ஒரு புறமிருக்க, உலகனைத்திற்கும் உணவளித்த நம்மவர் புசிக்க வகையின்றியும் கூலிக்கு வேலையின்றியும் கூக்குரலிடும்படியான நிலமை நேர்ந்திருக்கிறது. இத்தகைய இழி நிலைமைக்குக் காரணம் யாதென்பதற்குள்ள விவரங்களையும், இழிநிலையை நீக்கி, முன்போல் உயர்பதம்பெற்று ஒப்புயர்வுற்று வாழ்வதற்கான வழிகளையும், இச் சிறு நூலிலே பரக்கக் காணலாம். ராஜீய விஷயத்தில் உயர் நிலைமை யெய்துமுன், செல்வநிலையில் உயர்நிலை எய்த முனையவேண்டும். ஆதலின் தேசச்செல்வ நிலையை நம் சிறுவரும் சிறுமியரும் ஜன சமூகத்தினரும் நன்குணர்ந்து, தேசத் தொழிலை விருத்தி செய்து, வியாபாரத்தைப் பெருக்கி செல்வச் சிறப்புற்று சுக வாழ்வு வாழ்வதற்கான காரியங்களில் முனையவேண்டுமென்பதே இந்நூலின் நோக்கமாகும். ரூ. 1—0—0

---

கணேஷ் கம்பெனி, 39, தம்புசெட்டித் தெரு, சென்னை.